# நேரு சர்க்காருக்கு ஆபத்து!

பொருளடக்கம்



எழுதியது:

"கம்யூனிஸ்ட்"

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

தமிழ்நாடு கமிட்டி

6, டேவிட்ஸன் தெரு, ஜி. டி., சென்னை.

1947 அக்டோபர்] [விலை 8 அணா

# முகவுரை

தேசம் மிகப் பெரிய நெருக்கடியில் சிக்கிக் கொண்டிருக்கிறது. பஞ்சாப் அழிந்ததென்றே தற்போது கொள்ள வேண்டும். வகுப்புக் கலவரம் தேசம் முழுவதையும் விழுங்கிவிடும் போலிருக்கிறது. இந்தியாவின் தலைநகரில் அது பேய்த்தாண்டவமாடி, உலகத்தின் முன் பண்டித நேருவை வெட்கித் தலைகுனியச் செய்துவிட்டது. அந்த பேயை மற்ற இடங்களிலும் தாண்டவமாட விட்டால், தேசம் அழிந்துவிடும். அதை எதிர்த்துப் போராட சகல தேச பக்தர்களும் பொதுமக்களைத் திரட்ட வேண்டுமென்று இந்தியாவின் பிரதமர் ஒரு உருக்கமான வேண்டுகோள் விடுத்திருக்கிறார்.

பஞ்சாபை நாசப்படுத்தி, இன்று தேசத்தையே மிரட்டிக் கொண்டிருக்கும் அந்த எதிரியைப்பற்றி தெளிவாகப் புரிந்துகொண்டால்தான், பண்டித நேரு கேட்கிறபடி, பொதுஜன சக்தியைத் திரட்டி உக்கிரமாகப் போராட முடியும்.

இந்தச் சிறு பிரசுரத்தில் முதல் பகுதியில் இந்தியாவின் பிரதமர் அந்த எதிரிகளைப்பற்றி என்ன கூறுகிறார் என்பதை கொடுத்திருக்கிறோம். இரண்டாம் பகுதியில் அந்த எதிரியின் குணங்களைக் கொடுத்திருக்கிறோம்.

மூன்றாம் பகுதியில் அந்த நாசம் எப்படி உண்டாக்கப்பட்டது, யார் யார் சதிசெய்தார்கள் என்பதுபற்றி பஞ்சாப் கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் தன்வந்திரியும், பாபா குருமுக்சிங்கும் இந்தியாவின் பிரதமர் பண்டித நேருவிடமும் சர்தார் வல்லபாய் பட்டேலிடமும் ஆகஸ்ட் 26ம் தேதி கொடுத்த ரிப்போர்ட்டை விரிவாக எடுத்துக் கொடுத்திருக்கிறோம். தோழர் தன்வந்திரி பகத்சிங்குடன் சிறையில் அடைக்கப்பட்டு $9\frac{1}{2}$ வருஷம் தேசத்துக்காக அவதிப்பட்டார். 1939ல் விடுதலை செய்யப்பட்டவுடன்

லாகூர் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால், மீண்டும் 1940ல் கைது செய்யப்பட்டு, 1946 வரையில் சிறையில் வாடினார். வெளிவந்தவுடன் மீண்டும் பொதுஜனத் தொண்டில் ஈடுபட்டார். கலவரகாலம் முழுவதிலும் பஞ்சாபிலேயே இருந்து கலகத்தீயை அணைப்பதில் உயிரைக் கொடுத்து வேலை செய்த கம்யூனிஸ்ட்களுக்கு தலைமை தாங்கினார்.

பாபா குருமுக்சிங், தேசத்துக்காக 27 வருஷங்களை ஏகாதிபத்திய சிறையில் கழித்த பெரிய புரட்சிக்காரர். இவர்கள் இருவருக்கும் தம்முடைய அருமை பஞ்சாப் எரிக்கப்பட்டதைப் பார்த்து எப்படி உள்ளம் குமுறியிருக்கும் என்பதை தேசபக்தர்கள் சுலபமாக உணர்ந்து கொள்ளலாம். அவர்கள் கம்யூனிஸ்ட் கட்சி, தொழிற்சங்கம், கிஸான் சபை ஊழியர்கள் தத்தம் வட்டாரத்தில் நடந்தவற்றைப்பற்றி கொடுத்த ரிப்போர்ட்டுகளையும், அகதிகளின் முகாம்களில் காங்கிரஸ்காரர்களும், லீகர்களும் கொடுத்த ரிப்போர்ட்டுகளையும் ஆதாரமாகக்கொண்டு உண்மையான சதிகாரர்களை பண்டித நேருவிடம் கூறினர்.

நான்காவது பகுதியில், பிர்லாக்களின் சக்தி ஒருபுறமும், ஜனங்களின் சக்தி மறுபுறமும் இழுக்க, தேசிய சர்க்காரில் ஏற்பட்டிருக்கும் பிளவையும், அதனால் ஏற்படக்கூடிய அபாயத்தையும், தேசபக்தர்கள் உடனடியாக செய்யவேண்டிய காரியங்களையும் தந்திருக்கிறோம்.

இந்தசிறு பிரசுரத்தில், உண்மையான சதிகாரர்கள், அவர்களுடைய லக்ஷியம் ஆகியவை தெளிவாக எடுத்துக்காட்டப்பட்டிருக்கின்றன. நம்மைத் தாக்கியிருக்கும் கலகம் சாதாரணமானதல்ல; அது ஒரு பெரிய சதி; நம் பொதுஜன சர்க்கார்களை பலவீனப்படுத்தவும், நம் மக்களின் சுதந்திரத்தை சகோதர இரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்கவும், நம் தேசிய சீரமைப்பு வேலையைக் குந்தகம் செய்யவும், நம் ஜனநாயக இயக்கங்களையும் தேசிய இயக்கத்தையும் சிதைப்பதற்கும், இந்தச் சதி செய்யப்பட்டிருக்கிறது.

பஞ்சாப் படிப்பினைகளை நாம் தெளிவாகப் புரிந்து கொண்டால்தான், ஏகாதிபத்தியமும் அதன் ஏஜெண்டு களும் தொடுத்திருக்கும் கலவர தாக்குதலை எதிர்த்து நம்மால் பொதுஜனங்களுடைய சமாதான தாக்குதலைத் தொடுக்க முடியும்.

மகாத்மா காந்தியின் தெளிவான விஷயஞானமும் ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமையில் அவருக்குள்ள அழியா நம்பிக்கையும், பண்டித நேருவின் உயிருக்கும் துணிந்த தைரியமும் நம் ஒவ்வொருவருக்கும் வேண்டும். அப்போதுதான் வகுப்பு சமாதானத்துக்காகவும், ஜனநாயக முன்னேற்றத்துக்காகவும் நடக்கும் இப்பெரிய போராட்டத்தில் நம்மால் நம்முடைய தேசபக்தி மிகுந்த பாத்திரத்தை நடிக்கமுடியும்.

சென்னை,
15-10-47.

**எம். ஆர். வெங்கட்ராமன்,**
பொதுக்காரியதரிசி,
தமிழ்நாடு கமிட்டி, இந்திய கம்யூனிஸ்ட் கட்சி

# நேரு சர்க்காருக்கு ஆபத்து

"பொது மக்களே! நீங்கள் பெரும்பாடுபட்டு பெற்ற சுதந்திரத்துக்கு ஆபத்தேற்பட்டிருக்கிறது. அதை நீங்கள் அருமையாகக் கருதி நேசித்தால், உடனே அராஜகத்தை ஒழித்து அமைதியை ஏற்படுத்துங்கள்!" என்று செப்டம்பர் 30-ம் தேதி டில்லியில் தொழிலாளி மக்களின் கூட்டத்தில் இந்தியாவின் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு அபயக்குரலை எழுப்பினார்.

ஆகஸ்ட். 15ம் தேதி இந்திய சர்க்கார் நேருஜியின் தலைமையில் சுதந்திர சர்க்காராயிற்று. அன்றைக்கு பஞ்சாபில் இதுவரை இந்திய சரித்திரத்தில் என்றென்றைக்கும் கண்டறியாத மிகப்பெரிய யுத்தம் ஏற்கனவே ஆரம்பமாய் விட்டது. "எங்களுக்கு ஆளத் தெரியும்" என்று சொல்லி அதிகாரத்தை வாங்கிய நேரு சர்க்காருக்கு மிகப்பெரிய அபாயத்தை உண்டுபண்ணக்கூடிய விதத்தில் அராஜகம் தலைவிரித்தாட ஆரம்பித்தது. நேருஜி பஞ்சாபுக்கு ஓடினார். அராஜகத்தை அடக்க லியாகத்அலியுடன் சேர்ந்து பல முயற்சிகளைச் செய்தார். ஆனால் அவர் அங்கு பெரு முயற்சி செய்துகொண்டிருக்கும்போது, அவருடைய இருப்பிடத்திலேயே தேசத்தின் விரோதிகள் தீ வைத்து விட்டனர். அவர் அவசர அவசரமாக ஓடிவந்து தீயை அணைக்க முற்பட்டார். கல்கத்தாவில் கலகத்தை நிறுத்துவதில் வெற்றிபெற்று, பஞ்சாபை நோக்கி விரைந்து கொண்டிருந்த மகாத்மா காந்தி, நேருவின் சர்க்கார் காரியாலயத்தைச் சுற்றி தீ பற்றி எரிவதைப் பார்த்து, டில்லியிலேயே இறங்கிவிட்டார். அவர்கள் இருவரும் அல்லும் பகலும் தீயை அணைப்பதில் உயிரையும் பொருட்படுத்தாமல் ஈடுபட்டிருக்கின்றனர்.

இந்திய மக்களுக்கு பண்டித நேரு இந்த அராஜகத்தைப்பற்றிய உண்மை விபரங்களைக் கீழ்க்கண்டவாறு எடுத்துக்கூறுகிருர்:

"இன்றைக்கு நாட்டில் ஏற்பட்டுள்ள அராஜகம் சாதாரணமானது அல்ல; வெகு ஸ்திரமாக ஸ்தாபிக்கப்பட்டுள்ள எந்த அரசாங்கத்தையும் இந்த அராஜகம் அடியோடு பிடித்தாட்டி சாய்த்து விடக்கூடும். அந்த அளவுக்கு அபாயகரமானது. மேலும், இந்த அராஜகம் நம்முடைய சுதந்திர சர்க்கார் பிறந்த தினத்தன்றே பக்கத்துக்குப் பக்கம் பெரும் பூதமாகக் கிளம்பிற்று. ஆகவே, சுதந்திர தேசிய சர்க்காருக்கு எத்தகைய அபாயம் என்பதை சுலபமாகப் புரிந்துகொள்ளலாம்." (6-10-47)

இந்த அராஜகத்திஞல் நமக்கு ஏற்படக்கூடிய அபாயம் எத்தகையதென்பதைப்பற்றி நேருஜி கூறியதாவது:

"முகலாய சாம்ராஜ்ஜியம் சரிந்துவிழுந்தபோது நாடெங்கும் அராஜகம் தலைவிரித்தாடிற்று. அப்போது ஜனங்களுக்குத் தலைவர்களாக விளங்கியவர்கள் ராஜாக்களும், நவாபுகளுமேயாவர். அவர்களை ஒருவர்மீதொருவர் ஏவிவிட்டு, அராஜகத்தை நன்கு பயன்படுத்தி ஆங்கில வியாபாரிகள் நம்மை அடிமைப்படுத்தினர். இப்போது தங்களுடைய சுதந்திரத்துக்காகப் போராடிய தலைவர்களின் பேச்சைக் கேட்காமல், அத்தலைவர்களுடைய சர்க்கார் ஒழுங்காக வேலைசெய்ய சந்தர்ப்பமளிக்காமல், இந்திய ஜனங்கள் அட்டூழியங்களைப் புரிவதில் ஈடுபடுவார்களேயாஞல், முகலாய சாம்ராஜ்ஜிய வீழ்ச்சியின்போது காணப்பட்டதுபோன்ற அராஜகமே நாட்டில் தலைவிரித்தாடும்.

"அவ்விதம் அராஜகம் தலைவிரித்தாடுகிறபோது, நமக்கு உதவிசெய்ய பல அந்நியநாடுகள் தயாராக இருக்கின்றன. ஆஞல் அவை நமக்கு உதவுவதற்கு பதில், தமக்கு சாதகமாகக் குழப்பத்

தைப் பயன்படுத்தவே ஆயத்தமாக இருக்கும். ஆகவே, அராஜகம் தலைவிரித்தாடுகிறபோது இந்தியா தனக்கு உதவும்படி அந்நிய நாடுகளை அழைக்கவே கூடாது.

"அராஜகத்தினால் நம்மை வெளிநாட்டார் ஆக்கிரமிப்பார்கள் என்பதுமட்டுமல்ல. நம்மிடையேயுள்ள ராஜாக்களிலேயே சிலர் தங்களுக்கு அதிகமாக அதிகாரத்தைக் கைப்பற்றவோ, அல்லது, அதிகமாக பிரதேசங்களைப் பிடிக்கவோ முயற்சி செய்துகொண் டிருக்கின்றனர். இவர்களுடைய அபாயமும் இருக்கிறது." *(6-10-47)*

இந்த அராஜக அபாயத்தை சமாளிப்பதில் தேசிய சர்க்காருக்கு எத்தகைய விசேஷ கஷ்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை பிரதமர் நேரு கீழ்க்கண்டவாறு கூறினார்:

"இந்திய ஜனங்களுக்கும் தேசிய இயக்கத்துக்கும் அநேக விரோதிகள் உண்டு. அவர்கள் நம்மை முன்னேற விடாமல் தடுத்து முட்டுக்கட்டை போடுகின்றனர் என்றால், அதை நாம் எளிதில் புரிந்துகொள்ளலாம். ஆனால் நம்முடைய நண்பர்களிலேயே சிலர் நமக்குக் கஷ்டங்களை உண்டுபண்ணுவதைத்தான் புரிந்துகொள்ள முடியவில்லை."

*(6-10-47)*

அராஜகத்தின் மூலம் இத்தகைய பேராபத்தை உண்டுபண்ணியர்கள் யார் என்பதைப்பற்றி நேருஜி பேசுகிறபோது சொன்னதாவது:

"பொதுமக்களே! எச்சரிக்கை செய்கிறேன்! இன்று அராஜகத்தை சிருஷ்டிப்பவர்கள் யார்? தங்களுடைய சுயநலத்துக்காக எதையும் செய்கிற கும்பல் இந்நாட்டில் ஒன்றுண்டு. அவர்களே காரணம். அராஜகத்தை உண்டுபண்ணினால்தான் இன்றைக்குத் தங்களுடைய சுயநலத்தைக் காப்பாற்றிக்கொள்ளமுடியும் என்று அவர்கள் நினைக்கின்றனர். அவர்களில் சிலர் நம் நாட்டிலுள்ள ராஜாக்கள். அவர்கள் தாங்கள் இந்து ராஜ்யத்

தை ஸ்தாபிக்கப் பாடுபடுவதாக வெளியில் வேஷம் போடுகின்றனர். ஆனல் உண்மையில் தத்தம் சமஸ்தானங்களில் ஜனங்கள் கட்டி வளர்த்திருக்கும் பிரஜாமண்டலங்களை நசுக்க திட்டமிட்டுக் கொண்டிருக்கின்றனர்.''
*(4-10-47)*

இவ்விதம் அராஜகத்தை தூண்டுகிறவர்களைப்பற்றி கூறியபிறகு, இந்த குழப்பத்தில் தன்னுடைய சர்க்காருக்கு பதிலாக இந்துமத வெறியர்களைக்கொண்ட சர்க்கார் ஏற்படுத்தப்பட வேண்டுமென்று கோஷிக்கப்படுவதை சுட்டிக் காட்டினர். அந்த 'இந்துமத சர்க்கார் கோஷத்துக்கு என்ன அர்த்தம்' என்பதை விளக்கினர். அவர் கூறுகிறர் :

> "இன்றைக்கு இந்திய மக்களில் ஒரு சாராரிடையே பாஸிஸ்ட் தத்துவம் பரவி வருகிறது. மற்ற ஜனங்களை ஜென்ம விரோதிகளாக பாவித்து வெறுத்துக் கொல்லுவதே அது. இது தானகவே தோன்றிவிடவில்லை. கடந்த பல வருடங்களாக முஸ்லிம் லீக் செய்துவந்த வெறுப்புப் பிரசாரத்தின் நேரடியான விளைவே இது. ஜெர்மன் நாஜிகளிடமிருந்து முஸ்லிம் லீக் பாஸிஸ்ட் இனவெறுப்புத் தத்துவத்தை வாங்கிக்கொண்டது. 1938ல் நான் ஐரோப்பாவிலிருந்து திரும்பியவுடன் இங்கு முஸ்லிம் லீக் தலைவர்களிடம் ஐரோப்பிய சர்வாதிகாரிகளின் தத்துவங்கள் பரவியிருப்பதைப் பார்த்தேன். இப்போது அந்த பாஸிஸ்ட் தத்துவமும் ஸ்தாபன அமைப்பும் இந்துக்களிடையேயும்கூட பரவ ஆரம்பித்துவிட்டது. இந்த பாஸிஸ்ட் தத்துவத்தின் குரல்தான், இந்து ஆட்சி ஏற்படவேண்டுமென்ற குரல்''. *(3-10-47)*

இந்த தத்துவத்தின்படி, முஸ்லிம்கள் எல்லோரையும் இந்த நாட்டைவிட்டுத் துரத்திவிடவேண்டும். இந்து மதத்தில் பிறந்தவர்களுக்குமட்டுமே இந்நாட்டில் வசிக்கவும், நாட்டை நிர்வகிக்கவும் உரிமையுண்டு. அப்படியானல் எவனெவன் அதிகமாக தன்னை இந்துமத வீரனுக காட்டிக்கொள்கிறுனே, எவனெவன் அதிகமாக மற்ற

ஜனங்கள்மீது வெறுப்புணர்ச்சியை உண்டுபண்ணும்படி பேசுகிறுனே, அவனே ஹிட்லர்போல நாடாள வருவான். இதைப்பற்றி நேருஜி கீழ்க்கண்டவாறு கூறினுர் :

"இந்தியாவிலிருந்து சகல முஸ்லிம்களையும் ஒழித்துவிடவேண்டும் என்ற கோஷமும், அராஜகமும் சமூக, அரசியல், பொருளாதார வாழ்க்கையில் ஜனங்களுடைய தலைவர்களாக ஆவதற்குப் பிற்போக்குப் பிண்டங்களுக்கே உதவுகின்றன. இது மிகக்கொடூரமான அபாயமாகும் இந்தப் போக்கை எதிர்த்து சண்டைபோட்டு ஒழிக்கவேண்டியது சகல காங்கிரஸ்காரர்களுக்கும் தலையாய கடமையாகும்." (3-10-47)

அராஜகத்தை உண்டுபண்ணுகிறவர்களைப் பற்றியும், அவர்களுடைய லக்ஷியத்தையும் மேற்கண்டவாறு கூறிய பிறகு, நேருஜீ அராஜகத்தினுல் இதுவரை என்ன நடந்திருக்கிறது என்பதைப்பற்றி கீழ்க்கண்டவாறு கூறினுர்:

"நான் பிரதம மந்திரியாக வேலையை ஒப்புக்கொண்டதிலிருந்து இதுவரை ஒருவரையொருவர் கொன்றுகொள்ளாமல் ஜனங்களைத் தடுப்பதையோ, அல்லது அகதிகளின் முகாமுக்கும் ஆஸ்பத்திரிகளுக்கும் சென்று பார்வையிடுவதையோ தவிர வேறு எதையும் உருப்படியாக செய்யவில்லை. இந்தியாவை சுபீட்சமான, முற்போக்கான நாடாக ஆக்குவதற்கு நான் தயாரித்திருந்த திட்டங்களை யெல்லாம் தூரத் தள்ளிவைக்க நேர்ந்தது. (30-9-47)."

அப்படியானுல், முற்போக்கான ஒரு சீரமைப்புத் திட்டத்தினுல் பாதிக்கப்படக் கூடிய பதுக்கல்கார பணமூட்டைகள், ஜமீன்தார்கள், ஜாகிர்தார்கள் முதலியவர்கள் அராஜகத்தினுல் லாபமடைகின்றனர் என்பதும், சீரமைப்பினுல் நன்மை யடையக்கூடிய பொதுமக்களின் கவனம் அந்த பிற்போக்குப் பிண்டங்களின்மீது விழாமல் அராஜகத்தினுல் வேறு மார்க்கத்தில் திருப்பப் பட்டது என்பதும் தெட்டத் தெளிவாக விளங்கும். அந்த பிற்போக்குப் பிண்

டங்களின் தொழில் தேசத்துரோகம் செய்வதே. ஆகவே, அவர்கள் தங்கள் தேசத் துரோகத்தை மறைக்க வெளிக்கிளம்புகிற கோஷத்தைப் பற்றி பண்டித நேரு கீழ்க்கண்டவாறு கூறினர்:

"முஸ்லிம்கள் எல்லோரும் தேசத்துரோகிகள் என்று கூறி இந்த நாட்டை விட்டு துரத்தப்பட வேண்டுமென்று கூறப்படுகிறது. இந்திய சர்க்காருக்கும் இந்திய யூனியனுக்கும் துரோகம் செய்து முஸ்லிம்கள் வேறு நாடொன்றுக்கு ஐந்தாம் படையினராக வேலை பார்க்கின்றனர் என்று நிரூபிக்கப் பட்டால், அவர்களைத் தண்டிக்க இந்தியாவுக்கு சகல உரிமைகளும் உண்டு. ஆனல் சகல முஸ்லிம்களையும் வேரோடு பெயர்த்து வெளியேறும்படி நம்மால் நிர்ப்பந்தப்படுத்த முடியாது. துரோகிகள் ஒரு மதத்தினரில் மட்டுமில்லை. ஹிந்துக்களிலும், சீக்கியர்களிலும் அநேகர் கடந்த காலத்தில் தேசத்துக்கு துரோகம் செய்திருக்கின்றனர். இந்திய தேசபக்தர்களை ஆங்கிலேயர்கள் கொடூரமாக அடக்கிக் கொண்டிருந்த போது, ஆங்கிலேயருக்கு அநேக முஸ்லிம் அல்லாதவர்கள் மும்முரமாக உதவி செய்திருக்கின்றனர். இந்த துரோகிகளை எந்த நாட்டுக்கு துரத்தமுடியும்? இன்றைக்கு எவன் அராஜகத்தை உண்டுபண்ணி தேசத்தில் நாசத்தை ஏற்படுத்தி சீரழிவுப் படுகுழியில் தள்ளுகிருனே, அவனே உண்மையான தேசத் துரோகி" (30-9-47—3-10-47).

இவ்வளவையும் கூறிய பிறகு, பண்டித நேரு இந்திய மக்களிடம் கீழ்க்கண்டவாறு கூறினர்:

"இந்திய தேசீய காங்கிரஸ் எப்போதுமே சோஷலிஸ்ட் ஜனநாயக ஆட்சிக்காகப் பாடுபட்டு வந்திருக்கிறது. அந்த ஆட்சியில், ஒவ்வொருவரும் ஜாதி, மத வித்தியாசமில்லாமல் வாழ்க்கையில் முன்னேற சம உரிமையும் சந்தர்ப்பங்களும் அளிக்கப் படும். இதுவரை அது எப்படி ஒரு வர்க்கத்தின் ஆதிக்கத்தை எதிர்த்துப் போரிட்டதோ, அதேபோல் அது இனிமேல் ஒரு வகுப்பினரின் ஆதிக்கம் ஏற்படு

வதை எதிர்த்துப் போராடும்......... நான் இந்தியா வின் பிரதம மந்திரியாக இருக்கும் வரையில் நிச்சயம், இந்தியா ஒரு ஹிந்துமத ராஜ்ஜியமாக ஆக விடமாட்டேன். நான் இந்திய மக்களின் பிரதிநிதி. ஜனங்கள் வேலையை விடும்படி கூறினுல், இப்பொறுப்பை விட்டு விலக கட்டுப்பட்டுள்ளவன். ஆனுல் நான் காட்டுகிற வழியில் இந்திய மக்கள் நம்பிக்கை வைக்க மறுப்பார்களேயானுல், இப் பதவியை விட்டு விலக எனக்கு உரிமை உண்டு." (30-9-47)

இவ்விதம் தன்னைக் குறிவைத்து பிற்போக்காளர்கள் தாக்குவதற்குக் காரணம் என்ன என்பதை விளக்கிய பண்டித நேரு, கடந்த அறுபது வருடங்களாக இந்திய தேசிய இயக்கத்துக்கு வழிகாட்டிய கோட்பாடுகளை 4-10-47ல் எடுத்துக் கூறினுர். அப்படிக் கூறிவிட்டு,

"நான் பிரதம மந்திரி என்ற ஹோதாவில் செய்கிற ஒவ்வொரு காரியத்தையும், அந்த கோட்பாடுகளை வழிகாட்டியாகக்கொண்டே செய்வேன். அவற்றை நீங்கள் ஒப்புக்கொள்ளமாட்டீர்கள் என்ருல், எனக்கு பதிலாக வேறுஒருவரை நீங்கள் பிரதம மந்திரியாக பொறுக்கி எடுத்துக்கொள்ளலாம்" என்ருர்.

பிரம்ப விளக்கமாக சொல்லிவிட்டார்.

- நான் ஜனநாயகவாதி.
- எனக்கு இந்து என்றும் முஸ்லிம் என்றும் வேற்றுமை இல்லை.
- நான் சோஷியலிஸ்ட் ஜனநாயகத்தை இந்தியாவில் காண விரும்புகிறேன்.
- இந்து என்றும் முஸ்லிம் என்றும் வேற்றுமையின்றி எல்லா ஜனங்களும் வாழ எல்லோருக்கும் சம உரிமைகள் இருக்கவேண்டுமென்று விரும்புகிறேன்.
- நான் பிரதமமந்திரியாக இருக்கும்வரை இவற்றுக்காகவே உழைப்பேன்.

- இவற்றுக்காக நான் போட்ட சீரமைப்பு திட்டங்கள், அராஜகத்தால் தடைப் பட்டன.
- இவற்றை நீங்கள் ஒப்புக்கொள்ளாவிட்டால் ராஜினமா செய்வேன்.
- நீங்கள் ஒப்புக்கொண்டால், அராஜகத்தைத் தூண்டுகிறவர்களை ஒழித்துக்கட்டி அமை தியை நிலைநாட்டுக.

இதில் நேருஜியும் காந்திஜியும் ஒன்று.

இதில் நேருஜியின் கொள்கையை காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மான ரூபமாக வெளியிட்டிருக்கிறது.

- அராஜகத்தைத் தூண்டுகிறவர்கள் "சுயநல பிற்போக்காளர்கள்."
- கலகத்தை உண்டுபண்ணுகிறவர்கள் ராஜாக் கள்.
- கலகத்தை உபயோகப்படுத்த அந்நிய சர்க் கார்கள் தயாராக இருக்கின்றன.

இவையெல்லாம் இந்தியாவின் பிரதமர் தன்னை அப் பொறுப்பில் வைத்த மக்களுக்குக் கூறும் விபரங்கள்; அறைகூவல்.

இந்தியாவின் மக்கள் ஆகஸ்ட் 15ம் தேதியன்று நினைத்தனர்:

- பிரிட்டிஷ்காரனை விரட்டிவிட்டோம்.
- அந்நிய ஆதிக்கம் ஒழிந்தது.
- நம்முடைய தலைவர் இன்று பிரதமர்.
- அவர் நம் நாட்டை உலகில் சிறந்த நாடாக்குவார்.
- நம் நாட்டை ஆசியாவின் ஜோதியாக்குவார்.
- நம் நாட்டில் பஞ்சம், பட்டினியை ஒழிப்பார்.
- நம் நாட்டில் சமத்துவத்தை உண்டுபண்ணுவார்.
- நம் நாட்டில் ஜனநாயகம் தழைக்கச்செய்வார்.

- நம் நாட்டில் ஹிட்லர், முஸோலினிபோன்ற சர்வாதிகாரிகளின் ஆட்சி ஏற்பட விடமாட்டார்.
- நம் நாட்டில் ஜமீன்தார்கள், இனும்தார்கள், முதலாளிகள் ஆதிக்கத்தை ஒழிப்பார்.
- நம் நாட்டில் ராஜாக்கள் ஆட்சியை ஒழிப்பார்,
- அவர் சோஷியலிஸ்ட்; அவர் ஜனநாயக வீரர்; அவர் தியாகி.
- ஐக்கிய தேச சபையில் தென்ஆப்பிரிக்க இந்தியர்கள், இந்தோனேஷ்யர்கள் உரிமைகளுக்காகப் போராடியதில் உலக ஜனநாயக மக்களின் நன் மதிப்பையும், உலக ஏகாதிபத்யவாதிகளின் வெறுப்பையும் சம்பாதித்திருக்கிறர்.
- அவர் நிச்சயம் நம்மை சரியான வழியில் நடத்திச் செல்வார்.

50 நாட்கள் கழிவதற்குள் அவர் கேட்கிறர்:

"இந்தியா எந்த வழியில் செல்லவேண்டும்?"

"என்வழியிலா? பஞ்சாப் நாசத்தை உண்டாக்கியவர்களின் வழியிலா?"

"சீரமைப்பு பாதையிலா, அல்லது சீரழிவுப் பாதையிலா?"

# II

# எதிர்ப் புரட்சி

பஞ்சாபில் நடப்பவை வெறும் வகுப்புக் கலவரம் அல்ல. அது ஒரு யுத்தம்.

சாதாரணமான யுத்தம் அல்ல; காட்டுமிராண்டி யுத்தம்.

மேற்குப் பஞ்சாபில் யுத்தம் புரிந்தவர்களின் லக்ஷியம் இந்து—சீக்கிய சிறுபான்மையினர் அவ்வளவுபேரையும் நிர்மூலமாக்கிவிட வேண்டுமென்பது.

கிழக்குப் பஞ்சாபில் யுத்தம் புரிந்தவர்களின் லக்ஷியம் முஸ்லிம் சிறுபான்மையினர் அவ்வளவுபேரையும் நிர்மூலமாக்கிவிடவேண்டுமென்பது.

சென்றவருடம் கல்கத்தா, நவகாளி, பீஹார், குர்முக்தேஷ்வர், ராவல்பிண்டி முதலிய இடங்களில் நடந்த கலவரங்களுடன் அதை ஒப்பிடவே முடியாது. ஏனெனில், அந்த கலவரங்களில் வகுப்பு உணர்ச்சி நிரம்ப அதிகமாக சூடேற்றப்பட்டதனல் வெறிகொண்டு, சாதாரண ஜனங்கள் கூட்டம் கூட்டமாகச் சென்று சிறுபான்மையினரைத் தாக்கினர். அவர்களிடம் கத்தி, ஈட்டி, கடப்பாறை போன்ற ஆயுதங்களே இருந்தன. பஞ்சாபில் அப்படி நடக்கவில்லை. அதிகமாக கொலை செய்தவர்கள், சூறையாடியவர்கள், கற்பழித்தவர்கள் சாதாரண ஜனங்கள் அல்ல. இதற்குமாருக, முஸ்லிம் நேஷனல் கார்டுகள், ராஷ்ட்ரீய சுயம் சேவக் சங்கம், ஷாஹித்தால் ஆகிய வகுப்புவாத ஸ்தாபனங்களின்,— நன்கு இராணுவப் பயிற்சிபெற்ற படையினரும், போலீஸ்காரர்களும், இராணுவத்தினருமே அதிகமாக கொலைசெய்தவர்கள்; கொள்ளையடித்தவர்கள்; கற்பழித்தவர்கள். அவர்கள் சுழல் துப்பாக்கி, இயந்திர பீரங்கி, கைகுண்டுகள் முதலிய நவீன போராயுதங்களைக் கையிலேந்தி, யுத்தமுனையில் சண்டைபோடும் பட்டாளம்போல் ஜீப்கள், 'ட்ரக்'குகள், குதிரைகள் முதலியவற்றில் ஏறிவந்து சிறுபான்மையினரைத் தாக்கினர்.

மேலும் மற்ற அம்சங்களிலும் பஞ்சாப் படுகொலை ஈடு இணையற்றிருக்கிறது. பலாத்காரத்தில், சித்திரவதையில், கொடுமையில், பெண்களை நிர்வாணமாக ஊர்வலம் விட்டதில், நடுத்தெருவில் நிறுத்தி பலர்கூடி கற்பழித்ததில், குழந்தைகளைப் பந்தாடிக் கொன்றதில், லக்ஷக்கணக்கில் மனிதர்களை எமனுலகுக்கு அனுப்பியதில், பரந்த நிலப்பரப்பை நாசம் செய்ததில், நவீன போராயுதங்களைப் பயன்படுத்தியதில், கலவரத்தை அடக்குவதற்கு பதில் பரப்புவதற்கு போலீசும் அரசாங்க நிர்வாக இயந்திரமும் முடுக்கிவிடப்பட்டதில், பஞ்சாப் கலவரத்துக்கு இணை பஞ்சாபே!

ஒருசில நாட்களில் லக்ஷக்கணக்கான ஜனங்களை சகலத்தையும் துறந்து வேரோடு பெயர்ந்து ஓடும்படி செய்ததிலும் அதோடு வேறு எதையும் ஒப்பிடமுடியாது.

அதில் ஏற்பட்ட அழிவுக்கு அளவே இல்லை.

எதையெதையெல்லாம் மனிதவர்க்கம் மிகவும் உன்னதமானவையாகக் கருதுகிறதோ, அவையெல்லாம் அழிந்தன. "பேயின் செயல்" என்றும், "சைத்தான் வேலை"யென்றும் எதையெதையெல்லாம் இந்து மதமும், சீக்கிய மதமும், இஸ்லாம் மதமும் கூறுகின்றனவோ அவையெல்லாம் தலைதூக்கி ஆனந்த நர்த்தனமாடின.

முக்கியமாக சில உதாரணங்களைமட்டும் இங்கு கவனிப்போம்.

## உன்னத குணங்கள்

● மேற்குப் பஞ்சாபில், சியால்கோட்டில் இந்து—சீக்கிய பெண்கள் நிர்வாண மாக்கப்பட்டு ஊர்வலம் விடப்பட்டனர். நடுத்தெருவில் பலரால் கற்பழிக்கப்பட்டனர். அதேபோல், கிழக்குப் பஞ்சாபில், அமிருதசரஸில், முஸ்லிம் பெண்கள் நிர்வாணமாக ஊர்வலம் விடப்பட்டனர்; கற்பழிக்கப்பட்டனர்.

● இந்து—சீக்கிய பெண்களின் ஸ்தனங்களை முஸ்லிம்கள் அறுத்து வெறியாட்டம் ஆடுவதும், முஸ்லிம் பெண்களின் ஸ்தனங்களை இந்து—சீக்கியர்கள் அறுத்து கூத்தாடுவதும் சர்வ சாதாரண நிகழ்ச்சி.

● கொள்ளையடிக்கப் போகாதவர்கள் இருபுறங்களிலும் அபூர்வம். யுத்தத்தில் எதிரிகளின் சொத்தை கைப்பற்றி பங்கிட்டுக் கொள்வதற்கு இஸ்லாம் மதமே அனுமதிக்கிறது என்று மேற்குப் பஞ்சாபில் கொள்ளையடித்தவர்கள் சாதாரணமாகக் கூறினர். கிழக்கு பஞ்சாபில், கொள்ளையில் கலந்துகொள்ளாதவர்களைப் பார்த்து, கீழ்க்கண்டவாறு சாதாரணமாகக் கூறப்பட்டது: "கும்பமேளாவுக்குப் போகாதவர்களும் கங்கையில் ஸ்நானம் செய்யாதவர்களும் நரகத்துக்குப் போவார்கள் என்பது பழமொழி. இப்பொழுது கொலை செய்

யாதவனும், சூறையாடாதவனும் தனக்கு பாபம் செய்த வனைக் கடவுள் கருதுவார்.''

இரக்கம், மாதர் மானத்தைக் காப்பது, குழந்தைகளை நேசிப்பது, கொலைக்கு அஞ்சுவது, திருடப் பயப்படுவது, நண்பனுக்கு உதவுவது முதலிய மனிதவர்க்கத்தின் உன்னத குணங்கள் இந்த அட்டூழியங்களில் அழிந்தன.

## தேசீய பரம்பரை

அடுத்தபடியாக, தேசிய இயக்கத்தின் பரம்பரை முழுதும் அழிக்கப்பட்டது.

● பகத்சிங்கின் லாகூர் மேற்கு பஞ்சாபில் அழிந்தது.

● ஜாலியன் வாலாபாகில் உயிர்விட்ட ஹிந்து-முஸ்லிம்-சீக்கிய தியாகிகளின் அமிருதசரஸ் கிழக்குப் பஞ்சாபில் அழிந்தது.

● ஏகாதிபத்ய எதிர்ப்பு உணர்ச்சி, தேசபக்தி, சகோதர ஒற்றுமையே அவை.

● டாக்டர் அன்ஸாரியின் வீடு டில்லியில் எரிக்கப்பட்டது. அவர் தேசீய இயக்கத்துக்கு செய்த சேவைகள் பொன்னெழுத்துக்களால் சரித்திர ஏடுகளில் பொறிக்கப் பட்டிருக்கின்றன. அவருடைய மகள் ஜொஹராவும், மருமகன் டாக்டர் ஷௌகத்துல்லா அன்ஸாரியும் வெள்ளைக்காரன் ஹோட்டலில் தஞ்சம் புகுந்தனர். இதுதானா டாக்டர் அன்ஸாரியின் சேவைக்கு இந்திய மக்கள் செலுத்தும் காணிக்கை என்று காந்திஜி கேட்டார்.

## தேசீய கல்வியும் கலையும்

கல்வியும் கலையும் அழிக்கப்பட்டது.

● டில்லியில் "அன்ஜுமனே—தருக்கி—உருது'' என்ற இலக்கிய கழகத்தின் காரியாலயம் எரிக்கப்பட்டது. அது டாக்டர் அன்ஸாரியின் பழைய வீட்டில் இருந்தது. அங்குதான் 1923ல் காந்திஜி, மௌலானா முகமது அலி முதலிய மதிப்புக்குரிய தலைவர்களெல்லோரும் தங்கியிருந்தனர். காங்கிரஸ்-கிலாபத் கூட்டங்கள் நடந்த இடம் அதுவே. அந்த இலக்கிய கழகம் முஸ்லிம்களுடையது

அல்ல. அதன் தலைவர் சர் தேஜ்பஹாதூர் சாப்ரு. அது அரசியல் ஸ்தானம் அல்ல. உருதுவின் வளர்ச்சிக்காக பாடு படுவதே அதன் வேலை.

● மகாத்மா காந்தியின் அடிப்படை கல்வி திட்டத்தை நிறைவேற்றும் கல்வி கழகங்களில் முதன்மையான "ஜமியா மிலியா" என்ற பிரசித்தி பெற்ற தேசிய கல்விக் கழகத்தின் கட்டிடங்கள் யாவும், டில்லியில் எரிக்கப்பட்டன. நூல் நிலையம், புத்தக விற்பனை கடை, புத்தக ஸ்டாக், முதியோர் கல்வி பள்ளிக்கூடம், மற்ற கிளைகள் எல்லாம் சாம்பலாயின. இரண்டு லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள அபூர்வமான ஹிந்தி, உருது, பார்ஸி இலக்கியங்கள் அழிக்கப்பட்டன. இந்த கழகத்தின் ஸ்தாபகர்கள் மகாத்மா காந்தி, ஹக்கீம் அஜ்மல்கான், டாக்டர் அன்ஸாரி, மௌலானா முகமதலி முதலியவர்களாவர்.

வகுப்புவெறி பிடித்த கொலைகார கும்பலுக்கு நல்லவை எதுவும் பிடிக்கவில்லை. நம்முடைய உன்னத இலக்கியங்களையும் அவர்கள் அழிக்க முற்பட்டு விட்டனர்.

## அந்நிய நாட்டு உறவு.

இவ்வளவுதானா? இன்னும் பாருங்கள்.

● டில்லி கரோல்பாகில், இந்தோனேஷ்ய குடியரசுக்கு ஒரு காரியாலயம் இருந்தது. இந்தோனேஷ்யா சம்பந்தப்பட்ட செய்திகளைத் தொகுத்து, "மெர்டேகா" என்ற பெயரில் பிரசுரமாக அச்சடித்து, இந்திய பத்திரிகைகளுக்கு வாராவாரம் இந்தோனேஷ்ய தேச பக்தர்களில் சிலர் அங்கிருந்து அனுப்பிக்கொண்டிருந்தனர். அவர்களுடைய அந்த காரியாலயத்தையும் வகுப்பு வெறியர்கள் எரித்து விட்டனர். மறுபடியும் டாக்டர் ஷாரியர் டில்லிக்கு வருகிறபோது எப்படி அவர் முகத்தில் பண்டித நேரு விழிப்பார்? ஆசிய உறவு மகாநாடு நடந்த டில்லியில் எப்படி அத்தகைய காரியம் நடந்தது என்று இந்தோனேஷ்ய ஜனங்கள் கேட்டால் அவர் என்ன பதில் கூறுவார்? ஏகாதிபத்யவாதிகளை எதிர்த்து, இந்தோனேஷ்ய மக்களுக்கு உதவிசெய்த பண்டித நேருவுக்குக் கெட்ட பெயரை உண்டாக்க செய்யப்பட்ட காரியம்தானே அது?

## வர்க்க ஒற்றுமை

ஹிந்து-முஸ்லிம்-சீக்கியர் ஒற்றுமைக்கு எடுத்துக் காட்டாக விளங்குபவை தொழிற்சங்கங்கள். முதலாளிகள் எவ்வளவோ வகுப்புவாதம் பேசியபோதிலும், அந்த ஒற்றுமையை சுலபமாக உடைக்கமுடியாது. மிகக் கொடூரமான கலகங்களிலும் அந்த ஒற்றுமையை எங்கும் உடைக்க முடிந்ததில்லை. ஏகாதிபத்ய எதிர்ப்பு போராட்டங்கள் ஒவ்வொன்றிலும், தொழிற்சங்கங்களில் ஐக்கியப்பட்டுள்ள தொழிலாளர்கள்தான், முன்னணியில் நிற்பதன்மூலம் மற்ற ஜனங்களும் ஒன்றுபடுவதற்கு உணர்ச்சியூட்டி வந்திருக்கின்றனர். அப்படி இருந்தும், இன்று டில்லியிலும் பஞ்சாபிலும் பலாத்காரத்தால் அந்த ஒற்றுமை சங்கங்கள் தகர்க்கப்பட்டு விட்டன. 144 தடையுத்தரவும், ஊரடங்கு சட்டமும் பிறப்பித்து எல்லா தொழிலாளர்களையும் போலீஸ் வீட்டிலேயே முடக்க, வகுப்பு வெறியரின் கொலைகாரப் படையினர் சிறுபான்மையினரைச் சேர்ந்த தொழிலாளர்களைக் கொன்றனர். டில்லியில் பிர்லா மில் கேட்டருகே தான் தொழிலாளர் வட்டாரத்துக்குள் கலகம் பரப்பப்பட்டது. பிர்லாவின் கருங்காலிகளான ரௌடிகள், முஸ்லிம் தொழிலாளிகள் பிர்லா மில்லைவிட்டு வெளியே வரும்போது தாக்கி எட்டுப்பேரை கொன்றனர். உடனே, வெளியில் தயாராகக் காத்திருந்த ஆர். எஸ். எஸ். காரர்கள் மற்றவர்களைத் துப்பாக்கியால் சுட்டுத்தள்ளினர். மொகல்புரா ரயில்வே ஓர்க்ஷாப்பில் ஹிந்து-சீக்கிய தொழிலாளர்களை முஸ்லிம் வெறியர்கள் கொன்றனர். மிகப்பெரிய வேலைநிறுத்தத்தை நடத்தி 1946ல் பிரிட்டிஷ் ரயில்வே போர்டை நடுங்கச்செய்த வடமேற்கு எல்லைப்புற ரயில்வே தொழிலாளர் சங்கம், இன்றைக்கு சிதைக்கப்பட்டுவிட்டது.

## பிரஜா மண்டலம்

சமஸ்தானத்தில் நடக்கும் மத்திய பிற்போக்குக் கால எதேச்சாதிகாரத்தை ஒழித்து ஜனநாயக ஆட்சியை ஏற்படுத்துவதற்காக பண்டித நேருவின் தலைமையில் பல

வருடங்களாகக் கட்டி வளர்க்கப்பட்ட பிரஜா மண்ட லங்கள் பாட்டியாலா, ஜிந்த், நாபா, பரீத்கோட், மலகோத்லா, பஹவல்பூர், கபூர்தலா முதலிய பஞ்சாப் சமஸ்தானங்களிலும், ஆள்வார், பரத்பூர், ஜோட்பூர், பூர், பிக்கானிர் முதலிய ராஜபுதன சமஸ்தானங்களிலும் சிதைக்கப்பட்டன. அவற்றில் வசித்த சிறுபான்மையி னர் கொல்லவோ, அல்லது விரட்டவோபட்டனர். கத் தியவார், மத்திய இந்தியா சமஸ்தானங்களிலும் அவை அழிக்கப்படுமா என்ற கேள்வி பிறந்திருக்கிறது. அகதி களை குடியேற்றி பிரஜாமண்டலத்தைத் தாக்க ராஜாக் கள் மும்முரமாக வேலைசெய்துவருகின்றனர். ஜனநாய கத்துக்காகப் போராடி ஜனங்களின் தலைவர்களாக திகழ்ந்த உண்மை தேசபக்தர்களுக்கு பதில், "ஹிந்துமத பாதுகாவலர்கள்" என்ற ஸ்லோகத்தில் மறைந்து ராஜாக்களும் ஜனத் துரோகிகளும் ஜனங்களின் தலைவர் களாக ஆகிறுர்கள்.

## கிஸான் இயக்கம்

அகில இந்திய கிஸான் இயக்கத்தில் பஞ்சாப் சீக் கிய விவசாயிகள் மதிப்புக்குரிய ஸ்தானத்தை வகித்து வந்தனர். பெரிய ஜமீன்தார்களையும், ராஜாக்களையும், பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தையும் எதிர்த்து பல வீரம் செறிந்த போராட்டங்களை நடத்தியிருக்கின்றனர். ஜலந் தர், ஹொஷியார்பூர் ஆகிய இரண்டு ஜில்லாக்களைக் கொண்ட—பீஸ், சட்லஜ் நதிகளுக்கு இடையேயுள்ள தோபா என்ற வளமை மிகுந்த பிரதேசம் தேசபக்தி மிகுந்த விவசாயிகளின் கோட்டையாக விளங்கிற்று.

அந்த விவசாயிகளிடையே யிருந்துதான் ஆரம்பத் தில் பஞ்சாப் காங்கிரஸ் பிறந்தது. குருத்துவாராக்களை பிற்போக்குப் பிண்டங்களின் கையிலிருந்து மீட்பதற்கு நடந்த மகத்தான அகாலி இயக்கம் பிறந்தது. 1914—15ல் பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து கிளம்பிய வீரம்செறிந்த பாபாகள் எல்லோரும் தோபாவின் புத்திரர் களேயாவர். வலுப்பொருந்திய கிஸான் சபைகள் இருந்த இடமும் அதுவே.

இன்று அந்த தோபா கண்டதுண்டமாக சிதைக்கப் பட்டுக் கிடக்கிறது. வகுப்பு வெறிக்கு பலியாகாமல் எவ்வளவோ உறுதியுடன் எதிர்த்துநின்றபோதிலும் கூட, வெறியர்களின் ஆயுதம் தாங்கிய தாக்குதலாலும், பொய்வதந்திகளாலும் அவ்விவசாயிகளின் மனமும் திட மும் உடைக்கப்பட்டன.

## இராணுவம்

1946ல் இந்திய கடற்படை, தரைப்படை, ஆகாயப் படை வீரர்கள் எல்லோரும் இந்து-முஸ்லிம்-சீக்கியர் என்ற வேற்றுமை பாராட்டாமல், பிரிட்டிஷ் படைகளை எதிர்த்து ஆவேசத்துடன் கிளம்பியதைப் பார்த்தோம். "பண்டித நேருவுக்கு ஜே!", "ஜெய் ஹிந்த்" என்று அவர்கள் கோஷித்தார்கள்.

இன்றைக்கு அந்த இராணுவம் சிதைந்து நிற்கிறது. பாக்கிஸ்தான் இராணுவத்திலுள்ள முஸ்லிம்களும், இந்திய யூனியன் இராணுவத்திலுள்ள இந்து—சீக்கியர் களும் ஒருவரை யொருவர் ஜென்ம விரோதிகளாகப் பாவித்து வெறுக்கின்றனர். இந்த பஞ்சாபி இந்து—சீக்கிய சோல்ஜர்களின் அருமை தாயகம் நாசமாக்கப்பட் டது; வீடுவாசல்கள் தீய்ந்தன. உற்றூர் உறவினர் அகதிகளாயினர். இதை நினைக்க நினைக்க ஆத்திரம் வருகிறது. பழிவாங்க வேண்டுமென்று துடிக்கின்றனர். ஆனுல் யாரை என்று யோசிப்பதில்லை. ஆர். எஸ். எஸ். காரர்களும் அகாலிகளும் 'முஸ்லிம்களை' என்று சுட்டிக் காட்டி பிரசாரம் செய்துகொண்டிருக்கின்றனர். இரண்டு ராணுவங்களிலும் கேந்திரமான அதிகாரத்தி லிருக்கும் பிரிட்டிஷ்காரர்களும், அவர்களுடைய அடி வருடிகளும் இந்தப் பிரசாரத்தை அனுமதிப்பது மட்டு மல்ல; தாங்களே அவ்விதம் பிரசாரம் செய்கின்றனர். பஞ்சாபில் எல்லைப் பாதுகாப்பு படையினர் சிறுபான் மையினரை சுட்டுக்கொன்றபோது, அதற்கு தளகர்த்தர் களாக இருந்தவர்கள் பிரிட்டிஷ்காரர்கள். அத்தளகர்த் தர்கள் இந்து-சீக்கிய சிறுபான்மையினரைக் கொன்ற மூஸ்லிம் சோல்ஜர்களுக்கும் தலைமைவகித்தனர்; முஸ்லிம்

சிறுபான்மையினரைக் கொன்ற இந்து—சீக்கிய சோல் ஜர்களுக்கும் தலைமைவகித்தனர்.

இந்து—சீக்கிய கலகக்காரர்களைச் சுட்டு அடக்கி, நேருஜியின் சர்க்காருக்கு உதவிசெய்ய டில்லியிலும் மற்ற இடங்களிலும் இந்து-சீக்கிய சோல்ஜர்களும் போலீஸ் காரர்களும் மறுத்துவிட்டனர். ஆனால் சிறுபான்மை யினரைச் சுடுவதில் கலகக்காரர்களுடன் சேர்ந்துகொண் டனர். தேசீய இயக்கத்தின் தலைவர் நேருவை விரோதி யாகவும், தாராசிங், பல்தேவ் சிங் போன்ற வடிகட்டின ஏகாதிபத்ய தாசர்களையும் ராஜாக்களையும் சீக்கிய சோல்ஜர்கள் தங்களுடைய தலைவர்களாகவும், சியாமபிர சாத் முகர்ஜிபோன்ற வகுப்புவாதிகளை இந்து சோல்ஜர் கள் தங்கள் தலைவர்களாகவும், பாவிக்க முற்பட்டிருக் கின்றனர். இந்த நிலைமையில் தென் இந்திய படையி னரே நேருஜீயின் சர்க்காருக்கு உதவினர் என்பது நினைவி லிருக்கும். சுதந்திர தினத்தில் துக்கம் கொண்டாடிய திராவிடக்கழகம், இந்த படையில்கூட "ஆரிய-திராவிட இனப்போர்" என்ற பாஸிஸ்ட் தத்துவத்தை ஊட்டி வருவதைப் பார்க்கும்போது, நம் இராணுவம் எத்த கைய அபாயகரமான நிலைமையில் இருக்கிறது என்பது விளங்கும். இந்தப் படையை நம் தேசிய சர்க்கார் எத் தனை நாட்களுக்கு நம்ப முடியும்?

## அரசாங்க நிர்வாகம்

மேற்கு, கிழக்கு பஞ்சாபுகளில் சர்க்காருடைய எந்த டிப்பார்ட்மெண்டும் வேலை செய்யவில்லை.

- தந்தி, தபால் போக்குவரத்து நின்றன.
- வரிவசூல் நின்றது.
- ரயிலுக்கு டிக்கட் வாங்குவது நின்றது.
- கொள்முதல் நின்றது.

சுருக்கமாக, சர்க்கார் கஜானவுக்கு பணம் கிடைக் கும் மார்க்கங்களெல்லாம் ஸ்தம்பித்துவிட்டன.

டில்லியில், நேருஜியின் தலைமை காரியாலயங்களில் வேலைபார்க்கும் ஆபீஸர்கள்—குறிப்பாக, பரம்பரையாக பிரிட்டிஷாருக்கு சேவை செய்து வந்திருக்கும் மேல்தர அதிகாரவர்க்கம்—நேருஜியை உதாசீனம் செய்கின்றனர். நேருவுக்குக் கூட்டங்களில் பேசத்தெரியுமே யொழிய, நிர்வாகம் செய்யத் தெரியாது என்றும், ஹிந்துக்களின் உயிருக்கும் உடைமைக்கும் பாக்கிஸ்தானில் ஆபத்தேற் பட்டிருக்கிறபோது முஸ்லிம்களை அவர் திருப்திப்படுத்து கிறார் என்றும் அவர்கள் சாதாரணமாக பேசுகிறார்கள். பிரிட்டிஷ் ஆட்சியை போற்றுகிறார்கள்.

ஏகாதிபத்ய சேவையில் கொழுத்த அந்த அதிகாரி களில் பலர், கன்னட் சர்க்கஸ் என்ற இடத்தில் முஸ்லிம் களின் கடைகளை சூறையாடுவதில் பங்கெடுத்துக் கொண் டனர். முஸ்லிம்களைக் கொன்று அவர்களுடைய பங்க ளாக்களையும், வீட்டு சாமான்களையும் துளிகூட செல வின்றி கைப்பற்றி யிருக்கின்றனர். ஆர். எஸ். எஸ்ஸுக் கும், அகாலி கூட்டத்துக்கும் நேரடியாக முழு உதவி செய்தனர்.

தேசீய சர்க்காருக்கு விசுவாசமுள்ள, முற்போக் கான அதிகாரிகள் ஒரு சிலரே இருக்கின்றனர். அவர்க ளுடைய உதவியைக் கொண்டுதான் பண்டித நேரு தன் னுடைய உயிரையும் பணயம்வைத்து கலகத்தை அடக்கு வதில் ஈடுபட்டார். ஆனால் அவர் போடுகிற ஒவ்வொரு உத்திரவும்,உள்ளிருக்கும் நாசவேலைக்காரர்களால் நாசம் செய்யப்படுகிறது. இதனால்தான் அவர் பல விவகாரங்க ளில் தன்னுடைய சொந்தப் பிரதிநிதிகளை நியமித்தார். இவ்விதம் நியமிப்பதை பிர்லாவின் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" வன்மையாகக் கண்டிக்கிறது என்றால், நேரு ஜிக்குக் கெட்ட பெயரை உண்டுபண்ண எத்தகைய சக்தி கள் வேலை செய்கின்றன என்பதை புரிந்துகொள்ளலாம்.

இந்த அதிகாரிகளின் நடத்தையைப்பற்றி ஒரு விபர மான மகஜரை டில்லி காங்கிரஸ் கமிட்டி நேருஜியிடம் சமர்ப்பித்திருக்கிறது.

## போக்குவரத்து சாதனங்கள்

இந்திய ரயில்வேக்களுக்கு சீப் கமிஷனராக இருந்த எமர்ஸன், கலவரத்தால் ஏற்படக்கூடிய அபாயத்தைத் தெரிந்திருந்தும் வேண்டுமென்றே ரயில்வே பாதைகளைப் பாதுகாக்க ஒரு ஏற்பாடும் செய்யாமல் விட்டுவிட்டான். அரக்கானில் ஜப்பானியர் வந்தபோதும், தென் இந்திய ரயில்வே ஸ்ட்ரைக் நடந்தபோதும், தண்டவாளங்களைக் காப்பாற்ற பல கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டது என்பது நமக்கு ஞாபகமிருக்கும். அவன் அவ்விதம் பாதுகாப்புக்கு ஏற்பாடு செய்யாதபோது, டில்லியை சுற்றியுள்ள ரயில் பாதைகள், சமஸ்தான பிரதேசங்களில், ராஜாக்களின் ரௌடிப் படையினரால் துண்டிக்கப் பட்டன.

பிரதான ரயில்பாதை பரத்பூர் சமஸ்தானம் வழியாகச் செல்கிறது. அங்கு அது துண்டிக்கப்பட்டவுடன், டில்லியின் தொடர்பு அறுபட்டுவிட்டது.

இதேபோல், லாரி போக்குவரத்தும் சீர்குலைக்கப் பட்டுவிட்டது. ஆர். எஸ். எஸ். படையினர், அகாலி படையினர் உபயோகப்படுத்தும் அளவுக்குக்கூட லாரிகளும், ஜீப்களும் இந்தியா சர்க்காருக்குக் கிடைக்காமல் போய்விட்டதென்றால், அது விசித்திரம்தானே! பிரிட்டிஷ் இராணுவ ஆபீஸர்கள் இதில் பெரிய சதி செய்திருக்கின்றனர். இராணுவ லாரிகளில் பெரும்பாலானவற்றை ராஜாக்களுக்கும் கண்ட்ராக்டர்களுக்கும் விற்றுவிட்டதோடல்லாமல், டச்சுக்காரர்களுக்கும் அனுப்பிவிட்டனர்.

## பொருளாதாரம்

அமிருதசரஸ், லாகூர் ஆகியவையே பஞ்சாபில் தொழில்கள் பல மலிந்த பெரிய நகரங்கள். அவை இரண்டும் கடந்த மார்ச் மாதத்திலிருந்தே எரிந்துவருகின்றன. இந்த இரண்டு நகரங்களுடன் பொருளாதார துறையில் பஞ்சாபின் மற்ற பகுதிகள் பல்லாயிரக்கணக்கான வழிகளில் தொடர்பு வைத்திருந்தன. பஞ்சாப், எல்லைப்புற மாகாணம், சுற்றுப்புறமுள்ள சமஸ்தானங்கள் ஆகிய

வற்றுக்கு வேண்டிய சரக்குகளையெல்லாம் சப்ளைசெய்த பிரதான இடம் அமிருதசரஸ். இப்போது அதன் உயிர் போய்விட்டது. சகலவிதமான வியாபாரமும் சீரழிந்து விட்டது.

இரண்டு நகரங்களிலும் குறைந்தபக்ஷம் 16 அல்லது 17 லக்ஷம் வீதம் மக்கள் வசித்துவந்தனர். இவர்களில் 10 லக்ஷம் பேருக்குமேல் தொழிலாளிகள், சிறிய கடைக்காரர்கள், தலைச்சுமை வியாபாரிகள், கூலிக்காரர்கள். இப்போது இவர்களுக்கு வயிற்றுப் பிழைப்புக்கு எவ்வித வேலையோ தொழிலோ இல்லை. சரக்குகள் கிடைக்கவில்லை; எல்லாக் கடைகளும் இன்னும் திறக்கப்படவில்லை. நம் ஊர்களில் உள்ள கள்ளமார்க்கட்டைவிட ஆயிரம் மடங்கு கொடூரமான கள்ளமார்க்கெட் தலை தூக்கியிருக்கிறது.

பாலும் நெய்யும் வேண்டிய அளவு கிடைக்கக்கூடிய பஞ்சாபில் இன்றைக்கு நகரங்களில் அவை உங்களுக்குத் துளிகூட கிடைக்காது.

இயந்திரத் தொழில் பொருளுற்பத்தி லாகூரிலும், அமிருதசரஸிலும் அடியோடு ஸ்தம்பித்துவிட்டது. அமிருதசரஸில் மட்டும் 30 பாக்டரிகளுக்குமேல் எரிக்கப்பட்டுவிட்டன. இந்து முதலாளிகள் முஸ்லிம் தொழிலாளிகளை வெளியே தள்ளினர். முஸ்லிம் முதலாளிகள் இந்து தொழிலாளிகளை வெளியேற்றினர். இவ்விதம் ஆயிரக்கணக்கான தொழிலாளர்கள் வேலையில்லாமல் விரட்டப்பட்டனர். அவர்களுடைய தொழிற்சங்கங்கள் உடைக்கப்பட்டன.

இதேபோல் ஜலந்தர், லூதியானா, லாகூர், பாட்டியாலா, சியால்கோட், குஜரன்வாலா, லயால்பூர், ஒகாரா முதலிய தொழில் நகரங்களிலெல்லாம் நடந்தது.

பாட்மின்டன், டென்னிஸ்போன்ற விளையாட்டுக்கு வேண்டிய சரக்குகளை உற்பத்தி செய்வதில் உலகப் பிரசித்திபெற்றது சியால்கோட். இன்று அது மடிந்தது. அநேக பாக்டரிகள் எரிக்கப்பட்டன. மற்றவை மூடப்பட்டன.

வாஜிராபாத் கொல் உலைகளை ஏராளமாகக் கொண்ட நகரம். இரும்பு தட்டுமுட்டு சாமான்கள்




ஏராளமாக அங்கு உற்பத்தி செய்யப்பட்டன. சுமார் 35 ஆயிரம் கைத்தொழிலாளர்களுக்குமேல் அங்கு வேலை பார்த்தனர். இப்போது அது சகல தொழில் முக்கியத்துவத்தையும் இழந்துவிட்டது.

பஞ்சாபின் இயந்திரத்தொழில் வாழ்வு முழுதும்—கடந்த பத்து வருடமாக பஞ்சாப் மக்கள் இயந்திரத் தொழில் துறையில் முன்னேறி சாதித்த சாதனைகள் யாவும்—இன்று சுக்குநூருக சிதறிவிட்டன. கிழக்கு, மேற்கு ஆகிய இரண்டு பஞ்சாபுகளின் நிலைமை இது.

அதுமட்டுமல்ல. உழைத்து செல்வத்தை உற்பத்தி செய்கிற தொழிலாளர்கள் லக்ஷக்கணக்கில் வேரோடு இடம் பெயர்ந்துவிட்டனர். ஹிந்து—சீக்கியர்கள் மேற்கிலிருந்து கிழக்கே வந்துவிட்டனர். முஸ்லீம்கள் கிழக்கிலிருந்து மேற்கே சென்றுவிட்டனர்.

## வியாபாரம்

ராவல்பிண்டியில் கலகம் நடந்தபோது வியாபாரிகள் வர்க்கம் முழுதும் ஒழிக்கப்பட்டது. அவர்கள் கொல்லவோ அல்லது விரட்டவோ பட்டனர். அவர்களில் பெரும்பாலானவர்கள் ஹிந்துக்களும் சீக்கியர்களுமாவர். இது பஞ்சாபில் பல ஆயிரமடங்கு அதிக அளவில் இப்போது நடந்திருக்கிறது.

மேற்கு பஞ்சாபில் இருந்த ஹிந்து-சீக்கியர்களின் மண்டிகள் யாவும் தரைமட்டமாக்கப்பட்டன. வியாபாரம் செய்த வர்க்கம் முழுவதும் மேற்கு பஞ்சாபில் ஒழிக்கப்பட்டுவிட்டது.

இது மேற்கு பஞ்சாபின் பொருளாதாரத்தை மிகக் கொடூரமாக பாதித்திருக்கிறது. கிராமப்புறங்களுக்கு தேவை சரக்குகளை அனுப்பி, அங்கிருந்து தானியத்தைக் கொள்முதல் செய்த வியாபாரிகள் எல்லோரும் மறைந்துவிட்டனர். மண்டிகள் மூலம் தானியம் கொள்முதல் செய்வதென்ற சர்க்கார் திட்டமும் உடைந்துவிட்டது.

## விவசாயம்

விவசாயமும் அதேகதியில் கிடக்கிறது.

கிழக்கு பஞ்சாபிலிருந்த முஸ்லிம்கள் பெரும்பாலும், காமின்களோ (அதாவது, விவசாயக் கூலிகள்), அல்லது சிறு நிலக்காரர்களோ ஆவர். அவர்கள் லக்ஷக்கணக்கில் கிழக்கு பஞ்சாபைவிட்டுக் கிளம்பிவிட்டனர். மேற்கில் என்ன வேலை கிடைக்கும் என்பது அவர்களுக்குத் தெரியாது.

மேற்கு பஞ்சாபிலேயே வளமை செறிந்த பிரதேசம் "கேனல் காலனி". மாண்ட்கோமரி, லயால்பூர், ஷெய்க்புரா, குஜ்ரன்வாலா முதலிய ஜில்லாக்கள் அப்பிரதேசத்தில் உள்ளவை. அங்கிருந்து லக்ஷக்கணக்கான இந்து, சீக்கிய விவசாயிகள் வெளியேறிவிட்டனர்.

இந்த லக்ஷக்கணக்கான விவசாயிகளை ஒரு இடத்தில் மீண்டும் தரிக்கச் செய்வது சுலபமான வேலையல்ல. ஏனெனில், அவர்கள் தங்களுடைய விவசாயக் கருவிகள், மாடுகள் முதலியவற்றை இழந்துவிட்டனர்.

நன்கு விளைந்திருந்த சோளப்பயிரும், நெல் கதிர்களும் அறுப்பார் யாருமின்றி அழிகின்றன.

## தொத்துநோய்

கொல்லப்பட்டவர்களின் பிணங்கள் எங்கெங்கேயோ சிதறிக்கிடக்கின்றன. கழுகுகளும், நரிகளும், காக்கைகளும் சாப்பிட்டதுபோக மிஞ்சிய உடலிலிருந்து புறப்படும் நாற்றம் நாலா திசையிலும் பரவுகிறது. அந்த நாற்றத்துடன் விதவிதமான நோய்க் கிருமிகள் தொத்தித் தொத்திச் செல்கின்றன. கொலைகாரர்களின் துப்பாக்கி குண்டுகளிலிருந்து உயிர் தப்பியவர்களையும், கொலை, கொள்ளையில் ஈடுபட்டவர்களையும், கொலை கொள்ளையை வேடிக்கை பார்த்து சும்மா உட்கார்ந்திருந்தவர்களையும், கொலை, கொள்ளையைத் தடுக்க வீரதீரமாக சண்டை போட்டவர்களையும்—எல்லோரையும்-தாக்குவதற்கு வந்து கொண்டிருக்கின்றன. இவை எத்தனை லக்ஷம்பேரைக் கொல்லுமோ, நமக்குத் தெரியாது.

## லாபமடைந்தவர்கள்

● இந்த யுத்தத்தில் சூறையாடப்பட்ட பண்டங்களில் 100க்கு அறுபது பங்கு ஜமீன்தார்கள், கண்ட்ராக்டர்கள் முதலியவர்களிடம் இருக்கிறது. மிச்சமுள்ளவை அதிகாரிகளிடமும், இராணுவத்தினரிடமும், ஆர். எஸ். எஸ்—அகாலி—நேஷனல் கார்டு கூட்டத்தினரிடமும் இருக்கின்றன.

● டில்லியில் பல லக்ஷம் ரூபாய் மதிப்புள்ள முஸ்லிம் கடைகளையும், ஹோட்டல்களையும் ஊர் பற்றி எரிகிற சமயத்தில், ஹிந்து முதலாளிகள் சில நூறு ரூபாயைக் கொடுத்து தம்முடைய பெயருக்கு எழுதி வாங்கிக்கொண்டனர். உதாரணம், புது டில்லியிலுள்ள பிரசித்தி பெற்ற பிக்காடில்லி ஹோட்டல். இவ்விதம் விலைக்கு வாங்கி, கடையின் போர்டை தம்முடைய பெயரில் அவர்கள் மாற்றியவுடன், அக்கடைகளை சூறையாடாமல் கொலைக் கூட்டங்கள் விட்டுவிட்டன.

● இப்போது மேற்கு பஞ்சாபில், இந்து-சீக்கிய விவசாயிகள் விட்டுவந்த நிலங்களை அந்தந்த ஊரிலுள்ள ஜமீன்தார்கள் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். கிழக்கு பஞ்சாபிலிருந்தும், மற்ற இடங்களிலிருந்தும் அங்கு செல்லும் அகதிகளை பாக்கிஸ்தான் சர்க்கார் அந்த கிராமங்களுக்கு அனுப்புகிறது. ஆனால் தாங்கள் பிடித்த நிலத்தை அகதிகளிடம் விடமாட்டோமென்று அந்த முஸ்லிம் ஜமீன்தார்கள் சண்டை போடுகின்றனர். தங்களுடைய ரௌடிக் கூட்டத்தைக்கொண்டு, முஸ்லிம் அகதிகளை நிலத்தருகே வர விடாமல் விரட்டியடிக்கிறார்கள். பாக்கிஸ்தான் சர்க்கார் தங்களை அடக்க முயற்சித்தால், அச் சர்க்காரையே கவிழ்த்து, "இஸ்லாத்துக்காக ஜின்னாவைவிட தீவிரமாக சண்டைபோடும் வீரர்களுடைய சர்க்காரை அமைப்போம்" என்று மிரட்டுகிறார்கள்.

● இதேபோல் கிழக்கு பஞ்சாபிலும் பெரும்பாலான நிலங்களை ஜமீன்தார்கள் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கின்றனர்.

ஜமீன்தார்களும், ராஜாக்களும், வகுப்பு வெறியர்களும், ஊர்க் காலாடிகளும் ஜனங்களின் தலைவர்களாகத் திகழ்கின்றனர். அவர்களுடைய பேச்சுக்கு செவிமடுக்க மறுப்பவர்கள், முஸ்லிம் கைக்கூலி என்றோ, அல்லது இந்து கைக்கூலி என்றோ சொல்லப்பட்டு விரட்டப்படுகின்றனர்.

ஒரு ரௌடி யாராவது கையில் பணம் வைத்திருப்பதைப் பார்த்தால், அவரை ஒரு நொடியில் கொன்று பணத்தைப் பறிக்கிறான். "ஏன் அப்படி செய்தாய்" என்று பிடித்துக் கேட்டால், 'இந்து என்று நினைத்தேன், அல்லது முஸ்லிம் என்று நினைத்தேன்' என்று சொல்லி விடுகிறான். இவ்விதம், இந்துக்களுக்கு இந்து ரௌடிகளிடமேயிருந்தும், முஸ்லிம்களுக்கு முஸ்லிம் ரௌடிகளிடமேயிருந்தும் அபாயம் வருகிறது.

முதலில் சிறுபான்மை மக்களைக் கொன்று சூறையாடுவதிலும், கற்பழிப்பதிலும் ருசிகண்ட ரௌடிகள், இப்போது சிறுபான்மையினர் எந்த ஊரிலும் இல்லாததனால், தம் சொந்த மதத்தினரையே சூறையாடவும், சொந்த மதப் பெண்களையே கற்பழிக்கவும் முற்பட்டிருக்கின்றனர். யாராவது தட்டிக்கேட்டால், "நான் அவனை அல்லது அவளை சிறுபான்மை ஜாதி என்று சந்தேகப்பட்டேன்" என்று சொல்லி தப்பித்துக்கொள்கிறார்கள்.

## என்ன இது?

இது எதைக் காட்டுகிறது?

ஹிட்லர், முசோலினி, டோஜோ முதலியவர்கள் படையெடுத்தபோது ஒரு நாட்டில் எதையெதை அழித்தார்களோ, அவ்வளவும் சில நாட்களில் அழிக்கப்பட்டிருக்கின்றன.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் அறுபதுவருடமாக எதையெதை அழிக்க முயற்சித்ததோ, அதெல்லாம் அழிக்கப்பட்டிருக்கின்றன.

ஜனங்கள் அழிக்கப்பட்டனர். அவர்களின் நற்குணங்கள் அழிக்கப்பட்டன; அவர்களின் ஒற்றுமை இயக்கங்கள் அழிக்கப்பட்டன; அவர்களின் பொருளாதாரம் அழிக்கப்பட்டது; அவர்கள் அகதிகள்; அவர்களுக்கு வீடுஇல்லை; உடைமை இல்லை.

முஸ்லிம் ஜனங்கள் வாழவில்லை; இந்து ஜனங்கள் வாழவில்லை; சீக்கிய ஜனங்களும் வாழவில்லை.

ஆகவே, இந்த யுத்தம் முஸ்லிம் ஜனங்கள் யுத்தம் அல்ல; இந்து ஜனங்கள் யுத்தம் அல்ல; சீக்கிய ஜனங்கள் யுத்தமும் அல்ல.

இது ஜனங்களின் விரோதிகளால் ஜனங்கள்மீது தொடுக்கப்பட்ட யுத்தம்.

இது எதிர்ப் புரட்சி.

இதில் முஸ்லிம் ஜனங்களின் விரோதிகள் இந்து ஜனங்களுக்கும் சீக்கிய ஜனங்களுக்கும் ஆத்திரமூட்டினர். முஸ்லிம்களைக் கொல்லும்படி செய்தனர்.

இந்து ஜனங்களின் விரோதிகள் முஸ்லிம் ஜனங்களுக்கு ஆத்திரமூட்டினர். இந்து ஜனங்களைக் கொல்லும்படி செய்தனர்.

சீக்கிய ஜனங்களின் விரோதிகள் முஸ்லிம் ஜனங்களுக்கு ஆத்திரமூட்டினர். சீக்கிய ஜனங்களைக் கொல்லும்படி செய்தனர்.

இவ்விதம் ஜனங்களின் சகல விரோதிகளும் ஒரே நோக்கத்தில் வெவ்வேறு மூலைகளில் நின்று ஒத்துழைத்து ஜனங்களைக் குறிவைத்துத் தாக்கியிருக்கின்றனர்; தாக்குகின்றனர்.

அவர்களை ஜனங்கள் எதிர்த்துத் தாக்கவேண்டும். முறியடிக்கவேண்டும். இந்து ஜனங்கள் தங்கள் அணியிலிருந்து முஸ்லிம் ஜனங்களுக்கு ஆத்திரமூட்டுகிற தங்களுடைய எதிரிகளையும், முஸ்லிம் ஜனங்கள் தங்கள் அணியிலிருந்து இந்து-சீக்கிய ஜனங்களுக்கு ஆத்திரமூட்டுகிற தங்களுடைய எதிரிகளையும் முறியடிக்க வேண்டும்.

இதற்கு ஜனங்களின் சகல சக்திகளும் திரளவேண்டும். ஒவ்வொரு கட்சியிலுமுள்ள முற்போக்காளர் அவ்வளவு பேரும் சேரவேண்டும்.

இதற்கு முன்பு, அந்த எதிர்ப் புரட்சிக்காரர்கள் யார்? அவர்கள் எப்படி ஜனங்களைத் தாக்கினர்?

இதைத் தெரிந்துகொள்வோம்.

# III
# எப்படி கலவரம் பரப்பப்பட்டது?

"நான் சென்ற வருடமே கூறினேன், இந்தியர்களிடம் அதிகாரத்தை மாற்றினால் படுகொலைகளே நடக்கும் என்று. இப்போது என்னுடைய தீர்க்க தரிசனம் நிஜமாகிவிட்டது. பாருங்கள்! எத்தனை லக்ஷக்கணக்கான ஜனங்கள் இந்தியாவில் சாகிறார்கள்! பிரிட்டிஷாரின் ஆட்சியில் அவர்கள் எவ்வளவோ சுகமாக ஒற்றுமையுடன் இருந்தனர்! இப்போது அங்கு நடக்கும் படுகொலைகள் நிற்காது; இன்னும் பரவும். இதுவும் நிஜமாகும். உங்களில் அநேகர் பார்ப்பீர்கள்!" என்று செப்டம்பர் 26-ம் தேதியன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளின் தலைவன்—இங்குள்ள டோக்கு துரை, டவுன் துரைகளின் கட்சிக்குத் தலைவன்—சர்ச்சில் கூறினான்.

அவனுக்கு உடனே மகாத்மா காந்தி பதில் கொடுத்தார். "இந்தியாவில் நடக்கும் கலகங்களுக்கு, நாடுகளை அடிமைப்படுத்தி சாம்ராஜ்ஜியத்தைக் கட்டுகிற ஏகாதிபத்யவாதிகளே காரணம்" என்றார்.

நவகாளியில், கல்கத்தாவில், பீஹாரில், டில்லியில் கலவரங்களை நேரில் பார்த்து, சமாதானத்துக்காகப் பாடுபட்ட பிறகு, காந்திஜி மேற்கண்டவாறு பதில் அளித்தார்.

காந்திஜி சென்ற ஒவ்வொரு இடத்திலும் அவருடைய சமாதான முயற்சிகளில் பரிபூரணமாக ஒத்துழைத்து வகுப்புவாதிகளை முறியடிக்கக் கம்யூனிஸ்ட்கள் உதவி புரிந்தனர்.

கல்கத்தாவில் ஆகஸ்ட் முதல் வாரத்தில் அவர் உண்ணுவிரதமிருந்து, வகுப்புக் கலவரத்தை நிறுத்துவதற்காக உயிரைப் பணயம் வைத்தபோது, கல்கத்தா மாணவர்கள் ஆயிரக்கணக்கில் புறப்பட்டு ஆங்காங்கே கலகம் செய்த ரௌடிகளை உதைத்து விரட்டினர். இந்து ரௌடிகளை எதிர்த்து சண்டைபோட்டதில் ஐந்து இந்து மாணவர்கள் உயிரைத் தியாகம் செய்தனர். இதே போல் தொழிலாளிவர்க்கம் போராடிற்று. மிகப்பெரிய சமாதான ஊர்வலம் விடப்பட்டது. வகுப்புவாதிகள் முறியடிக்கப்பட்டனர். இதிலெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சி முன்னணியில் நின்றது.

காந்திஜி சர்ச்சிலுக்குக் கொடுத்த பதிலே கம்யூனிஸ்ட்களுடைய பதிலும்.

கம்யூனிஸ்ட் கட்சி கடந்த ஒரு வருடமாகவே பல இடங்களிலும் கலவரத்தைப்பற்றித் தந்த செய்திகளில் உண்மையான சதிகாரன் யார் என்பதை விடாமல் மக்களுக்கு எடுத்துக் கூறிவந்திருக்கிறது.

**● பிரிட்டிஷ் ஏகாதிபத்யமே முதலாவது சதிகாரன்.**

இருநூறு வருடமாக பிரிட்டிஷ் ஏகாதிபத்ய வாதிகள் இந்தியாவில் ஆட்சி புரிந்து வந்திருக்கின்றனர். அவர்களுக்கு இந்தியாவைப்பற்றி நிரம்ப நன்றாகத்தெரியும். இந்தியர்களின் பலம், பலஹீனம் முதலிய யாவற்றையும் தெரிந்து வைத்திருக்கின்றனர். அதோடு, அவர்கள் ராஜதந்திரத்தில் கைதேர்ந்தவர்கள். சிரித்துப் பேசியும், முறைத்து பார்த்தும், மறைந்து கிள்ளிவிட்டும், அவர்கள் எத்தனையோ திறமைசாலிகளையும்கூட 'குல்லா' போட்டிருக்கின்றனர். யார் யாரிடம் எப்படியெப்படி நடந்து கொள்வதென்பதில் அவர்கள் விசேஷ பயிற்சி பெற்றவர்கள். ஒரு காரியத்தைத் தாமே செய்வதற்கு பதில், மற்றவர்கள் மூலம் செய்து தம் லக்ஷியத்தைப் பூர்த்தி

செய்துகொள்வதில் அவர்களை எவருமே மிஞ்சிவிட முடியாது.

இந்தியாவுக்கு அதிகாரத்தை மாற்றுவதில் அவர்கள் தங்களுடைய திறமைகளையெல்லாம் வெகு சாதுர்யமாக உபயோகப்படுத்தினர். மௌண்ட்பேட்டன் தம்பதிகளின் புன்முறுவலே பலரை மயக்கிவிட்டது.

இந்திய ஜனங்களை இனி எதிர்த்து முன்னைப்போல் அடக்கி வைக்க முடியாது என்பதை உணர்ந்தவுடன் நாட்டைவிட்டு வெளியேறி விடுவதாகச் சொன்னார்கள்.

அதேபோல் ஆகஸ்ட் 15ம் தேதி வெளியேறினர். ஆனால் தாங்கள் பழக்கிய அதிகாரிகளையும், தங்களுக்கு ஆதிமுதல் விஸ்வாசத்துடன் சேவைசெய்த ஜமீன்தார்களையும், ராஜாக்களையும், தங்களுடைய இராணுவ தளபதிகளையும், சில மாகாணங்களில் கவர்னர்களையும், எல்லா மாகாணங்களிலும் டோக்துரை, டவுன்துரை போன்ற முதலாளிகளையும் அப்படியே விட்டுச் சென்றனர்.

அவர்கள் விட்டுச் சென்ற இவர்கள் எல்லோரும் இந்திய சர்க்காருக்கு விசுவாசமுடன் நடந்துகொள்வதாகப் பிரதிக்ஞை செய்தனர்.

இந்த செய்திகள் எல்லாம் பத்திரிகைகளிலும் நிரம்ப வந்தன. ஜனங்கள் எல்லாம் இனி சரியாகப் போய்விடும் என்று நினைத்தனர்.

ஆனால் பத்திரிகைகளில் செய்தி வராதபடி, அவர்கள் வேறு பல காரியங்களையும் செய்தனர். அவற்றைத் தெரிந்துகொண்டால்தான் இன்று நடக்கும் கலவரங்களுக்கு உண்மையான காரணம் விளங்கும்.

## அரசியல் லக்ஷியம்

அவர்களுடைய திட்டத்தின்படி இந்திய யூனியனும் பாக்கிஸ்தானும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் டொமினியன்கள். இன்னும் பரிபூரண சுதந்திர நாடுகளல்ல. ஆனால் சாம்ராஜ்ஜியத்தை விட்டு வெளியேறி பரிபூரண சுதந்திர நாடாக உரிமை உண்டு.

அவர்களுக்கு உலக திட்டம் ஒன்று உண்டு. அவர்களுடைய முதலாளிகள் இன்னும் இந்தியாவில் இருக்கின்றனர். அவர்களுடைய சரக்கை விற்க இன்னும் இந்தியாவின் மார்க்கெட் அவர்களுக்கு வேண்டியிருக்கிறது. ஆகவே, இந்தியா அவர்களைவிட்டு தனித்து சுதந்திர நாடாகிவிட்டால், அவர்கள் போட்டிருக்கும் இராணுவ திட்டங்களெல்லாம் நிறைவேற முடியாமல் போவதோடு பொருளாதாரத்திலும் பெரும் நஷ்டத்தை உண்டாக்கும்.

ஆகவே, அவர்கள் தங்களுடைய சாம்ராஜ்ஜியத்தை விட்டு இந்தியா வெளியேறுவதை விரும்பவில்லை. ஆனால் இதை நேரடியாக, "நீங்கள் வெளியேறக்கூடாது" என்று சொல்லி, "எங்கள் சாம்ராஜ்ஜியத்திலேயேதான் இருந்தாகவேண்டும்" என்று கட்டாயப்படுத்தினால், நம் ஜனங்கள் அவர்களை எதிர்ப்பார்கள். இதில் சகல ஜனங்களும் ஒன்றுசேர்ந்துவிடுவார்கள். ஆகவே, மறைமுகமாகவே இந்தக் காரியத்தை சாதிக்கவேண்டும்.

எத்தகைய நிலைமைகளை உள்நாட்டில் உண்டு பண்ணினால் இந்திய யூனியனும், பாக்கிஸ்தானும் தாமாகவே பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைவிட்டு வெளியேறாமலிருக்க உடன்படுவார்களோ, அல்லது, எத்தகைய நிலைமைகளை உண்டுபண்ணினால் உலகில் தனக்கு நல்ல பெயரும் இந்தியர்களுக்குக் கெட்டபெயரும் ஏற்பட்டு மீண்டும் இந்தியாவில் தலையிட்டு ஆதிக்கம் செலுத்த வசதி ஏற்படுமோ, அத்தகைய நிலைமைகளை உண்டுபண்ணுவதே அவர்கள் லக்ஷியம்.

அந்த நிலைமைகள் என்ன ?

உலக நாடுகளில் நல்ல பெயர் சம்பாதித்ததோடல்லாமல், ஐக்கியதேச சபையில் ஏகாதிபத்ய கோஷ்டியுடன் சேர்ந்து நிற்க மறுத்ததோடல்லாமல், சாம்ராஜ்யத்தைவிட்டு விரைவில் வெளியேறி பரிபூரண சுதந்திர குடியரசை ஸ்தாபிக்கப்போவதாகவும் கூறிக்கொண்டிருக்கும் பண்டித ஜவஹர்லால் நேருவையும், அவரைப் போன்ற மற்ற முற்போக்காளர்களையும், இந்திய யூனியன் சர்க்காரிலிருந்தும் பாக்கிஸ்தான் சர்க்காரிலிருந்தும்

விரட்டிவிட்டு, பிரிட்டிஷாருக்கு இஷ்டப்படுகிறபடி எதையும் செய்யக்கூடியவர்களை இரண்டு சர்க்கார்களி லும் அதிகாரத்துக்கு வரும்படி செய்வதே அவர்கள் திட்டம். இதற்கு முதலாவதாக, நேருவுக்கு ஆளத் திறமையில்லை என்ற கெட்ட பெயரை உண்டாக்குவ தோடு, அரசியல் துறையில் நேருவின் செல்வாக்கை ஒழித்துவிடவேண்டியது அவசியம்.

பிற்போக்காளர்களை அதிகாரத்தில் ஏற்றிய பிறகு, இரண்டு சர்க்கார்களுக்கு இடையேயும் சதா சர்வகால மும் சண்டை சச்சரவு நடந்துகொண்டே யிருக்கும்படி செய்து, அமைதிக்காக ஒரு மத்தியஸ்தர் அவசியம் என்ற நிலைமையை உண்டுபண்ணவேண்டும். இந்த மத்தியஸ் தர் வேஷத்தில் ஏகாதிபத்யத்தின் பிரதிநிதிகளால் முன்னைவிட அதிகமாக இந்தியாவில் ஆதிக்கம் செலுத்து வதற்கு சுலபமாக முடியும்.

## பஞ்சாபின் முக்கியத்வம்

இந்த அரசியல் திட்டத்தில், பஞ்சாப் மிகவும் கேந்திரமான ஸ்தானத்தை வகிக்கிறது. இதற்கு மூன்று காரணங்கள் உண்டு. அவையாவன :

1. சோவியத் யூனியனை எதிர்ப்பதற்காக அமெரிக்க ஏகாதி பத்தியவாதிகள் உலகமெங்கும் இராணுவ தளங்களை ஏற்படுத்தி யிருக்கின்றனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் இந்த விஷ யத்தில் ஏற்கனவே அமெரிக்கரின் பங்காளிகளாகி விட்டனர். இவர்கள் இருவருடைய இராணுவத் திட்டத்தின்படி, மேற்கே எகிப்திலிருந்து பாலஸ்தீனம், ஈராக், ஈரான் முதலிய நாடுகள் வழியே பல தளங்கள் சங்கிலித் தொடர்போல் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. அவற்றிற்கெல்லாம் மேற்குப் பஞ்சாப் சரியான பின்னணி தளமாக இருக்கிறது. ஆகவே, பஞ்சாபை நன்கு பயன் படுத்த எப்போதுமே அங்கு தங்களுக்குப் பிடித்தமான பிற் போக்காளர்கள் அதிகாரத்தில் இருக்கவேண்டுமென்று நினைத் தனர்.

2. இரண்டாவதாக, பஞ்சாப் பாக்கிஸ்தானுக்கும் இந்திய யூனியனுக்கும் எல்லைப்புறம். ஆகவே, எல்லைப்புறத்திலுள்ள ஜனங் களுக்கு இடையிலும், இராணுவங்களுக்கு இடையிலும் சச்சரவு

இருந்துகொண்டே இருக்குமானால், இரண்டு சர்க்கார்களும் நெருங்கி ஒத்துழைப்பதற்கு பதில் ஒருவரையொருவர் வெறுக்கும் விரோதிகளாவர். அப்போது, தத்தம் பாதுகாப்புக்கும், தத் தமக்கு வேண்டிய உதவிக்கும் பிரிட்டிஷாரை நாடியே இரண்டு சர்க்கார்களும் ஓடிவருவர்.

3. மூன்றாவதாக, இந்திய இராணுவத்திலும் பாக்கிஸ்தான் இராணுவத்திலும் உள்ள சோல்ஜர்களில் முக்கியமான பகுதியினர் பஞ்சாபிகள். அவர்களுடைய வீடுவாசல்களை அழித்து, அருமை பஞ்சாபை நாசமாக்கி, கிராமங்களைத் தீக்கு பலியாக்கினால், அதை பார்த்து மனம் வெதும்பி நிரந்தரமாக ஹிந்து - சீக்கிய சோல்ஜர் கள் முஸ்லிம்களையும், முஸ்லிம்கள் ஹிந்து - சீக்கியர்களையும் வெறுப்பர். அப்போது நடுநிலைமை வகிப்பவன் என்ற முறையில் இரண்டு படைகளிலும் பிரிட்டிஷ் ஆபீஸர்களின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தலாம்.

## கலவரத்துக்காக வேலை

ஆகவே, மேற்கண்ட திட்டத்திற்கு பஞ்சாபை பல நாட்க ளுக்கு முன்பே தயார்ப்படுத்த ஆரம்பித்தனர். எப்படி ?

1946ம் வருடம் முழுவதிலும் கல்கத்தா, நவகாளி, பீஹார், குர்முக்தேஷ்வர் முதலிய இடங்களில் கலவரம் நடந்தபோது, பஞ் சாப் அவற்றால் துளிகூட பாதிக்கப்படவில்லை. ஆட்லி தீர்ப்புக்கு முன்பு அங்கு கலவரத்தை உண்டு பண்ண வேவல் சதி செய்தான். கிஜீர் ஹயாத்கானைக் கூப்பிட்டு, நேஷனல் கார்டை தடை செய் யும்படி கட்டளையிட்டான். அந்த தடையை ஆக்ஷேபித்துக் கிளம் பிய முஸ்லிம் இயக்கத்தைக் கலகப் பாதையில் திருப்பிவிட ஸி. ஐ. டி. களை பல வேஷங்களில் கிஜீர் அனுப்பினான். முஸ்லிம்களின் இயக்கம் வகுப்புவாத பாதையில் கடைசிவரை திரும்பவே இல்லை. "பாக்கிஸ்தான் அடைந்தே தீருவோம்" என்ற கோஷங்கள் கோஷிக்கப்பட்டபோதிலும், "ஹிந்து முஸ்லிம் பாய், பாய்; சப்கி துஷ்மன் நோக்கர் ஷாஹி!" (ஹிந்து-முஸ்லிம் சகோதரர் கள்; எல்லோருக்கும் எதிரி அதிகார வர்க்கம்!) என்ற ஸ்லோ கங்களையும் முஸ்லிம்கள் கோஷித்தார்கள். கச்சேரிகளையும், சிறை களையும் அநேக தடவை முஸ்லிம் ஜனங்கள் தாக்கினார்கள். ஹிந்து- சீக்கியர்களின் உயிருக்கோ, உடைமைக்கோ எவ்வித ஆபத்தும் ஏற் படவில்லை. பார்க்கப்போனால், அநேக ஹிந்துக்களும் சீக்கி

யர்களும் லீக் கூட்டங்களில்கூட கலந்து கொண்டனர். "எங்களுடைய போராட்டம் அதிகார வர்க்கத்தை எதிர்த்தேயொழிய, ஹிந்து - சீக்கியர்களை எதிர்த்து அல்ல!" என்று லீக் பிரசங்கிகள் பேசிய பேச்சுகளைக்கேட்டு மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். "முஸ்லிம்கள்கூட இறுதியாக பிரிட்டிஷாரை எதிர்த்து சண்டைபோட வருகிறார்கள்" என்று திருப்திப்பட்டனர்.

இவ்விதம் நடந்ததை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் விரும்பவில்லை.

அந்த சமயத்தில் பிரிட்டிஷ் பிரதம மந்திரி ஆட்லி தன்னுடைய தீர்ப்பபை பிப்ரவரி 20ந் தேதி வெளியிட்டான். "ஒன்று அல்லது இரண்டு சர்க்கார்களிடம் அதிகாரத்தைமாற்றி, 1948 ஜூன் மாதத்துக்குள் வெளியேறி விடுகிறோம்" என்று கூறினான். இவ்விதம், "ஒரு சர்க்காரிடம் மாற்றாதே! இரண்டு சர்க்கார்களிடம் மாற்று!" என்று முஸ்லிம் லீகர்கள் கோஷம் போடுவதற்கு அடிகோலினான்.

உடனே, பஞ்சாபில் இருந்த கவர்னர் ஜென்கின்ஸுக்கு கட்டளை பிறந்தது. பஞ்சாபை படுகளமாக்குவதற்கு எல்லா தயாரிப்புகளையும் செய்யவேண்டுமென்பதே அக்கட்டளை.

## ஜென்கின்ஸ் ஆட்சி

பிரிட்டிஷார் "நில்!" என்றால் நிற்கக்கூடிய, "போ" என்றால் போகக்கூடிய **சர் கிஜிர் ஹயாத்கானை** ராஜினமா செய்யும்படி ஜென்கின்ஸ் உத்திரவிட்டான். அவனுடைய திட்டம் நிரம்ப சாதாரணமானது: கிஜிர்—காங்கிரஸ் கூட்டு மந்திரிசபைக்கு பதில், லீக் மந்திரிசபை ஏற்பட்டுவிடும் என்று இந்துக்களும் சீக்கியர்களும் நினைக்கும்படி செய்வது. லீக் மந்திரிசபை வந்தால், பஞ்சாப் முழுவதும் ஆட்லி தீர்ப்புப்படி பாக்கிஸ்தானுக்குப் போய் விடும் என்ற பீதியை ஏற்படுத்துவது. மறுபுறத்தில், லீக் மந்திரிசபை ஏற்படவிடாமல் இந்துக்களும், சீக்கியர்களும் தடை செய்கிறார்கள் என்று முஸ்லிம்கள் நினைக்கும்படி செய்வது.

இவ்விதம் அவன் கிஜிரை ராஜினமா செய்யச் சொன்னதற்குப் பிறகு, சில நாட்களுக்குள் மாகாணத்தில் வகுப்பு விரோதம் வெறியாக வளர ஆரம்பித்துவிட்டது.

ஜென்கின்ஸ் முதலில் காங்கிரஸின் நண்பனாக வேஷம்போட்டான். பிரிட்டிஷாரின் திட்டங்களைக் காங்கிரஸ் தலைவர்களை

ஒப்புக்கொள்ளும்படி செய்ய, அவ்விதம் அவனுக்கு வேஷம்போட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆனால் ஆட்லி தீர்ப்பு வந்தவுடன் அவன் லீகர்களுக்கு நெருங்கிய நண்பனானன். தங்களை மந்திரிசபை அமைக்க அவன் அழைப்பான் என்று எதிர்பார்த்து அவன்மீது லீக் தலைவர்கள் புகழ்மாலை பொழிந்தனர்.

ஆனால் அவன் லீக் மந்திரிசபையை ஏற்படுத்தவும் இணங்கவில்லை. "இந்துக்களும் சீக்கியர்களும் லீக் மந்திரி சபையை எதிர்ப்போம் என்றார்கள். ஆகவே, அவர்களை சரிப்படுத்துங்கள். உங்களை மந்திரிசபை அமைக்க அழைக்கிறேன்" என்று நிரம்ப சாதுபோல, வாழைப்பழத்தில் ஊசி குத்துவதுபோல, சிண்டை முடிந்துவிட்டான்.

இவ்விதம் சொல்லி, கடைசிவரையில் தன்னுடைய எதேச்சாதிகார, செக்ஷன் 93-வது பிரிவு ஆட்சியையே ஸ்தாபித்தான்.

## மௌண்ட்பேட்டன் தீர்ப்புக்கு தயாரிப்பு

பிப்ரவரியிலிருந்து ஜூன் 2-ம் தேதி மௌண்ட்பேட்டன் தீர்ப்பு வெளிவரும்வரை அவனுடைய ஆட்சியே நடந்தது. மௌண்ட்பேட்டன் தீர்ப்புக்குப் பிறகும் ஆகஸ்ட் 15ம் தேதிவரையிலும் அவனுடைய ஆட்சியே நடந்தது. ஜென்கின்ஸுடைய ரிப்போர்ட்டையும், ஜெனரல் இஸ்மேயினுடைய ரிப்போர்ட்டையும் கேட்ட பிறகே, பஞ்சாபையும் வங்காளத்தையும் இரண்டாகப் பிளந்து, 10 மாதங்கள் முன்னதாகவே ஆகஸ்டு 15ம் தேதி வெளியேறி விடுவதாக ஏகாதிபத்யவாதிகள் மௌண்ட்பேட்டன் வாயிலாக அறிவித்தனர்.

பிப்ரவரியிலிருந்து ஜூன் மாதத்துக்குள் ஜென்கின்ஸ் ஆட்சியில் மூன்று முறை பெரிய வகுப்புக்கலவரங்கள் நடந்தன. கிஜிர் ராஜினாமா செய்த தினத்தன்றே லாகூரில் கலகம் மூண்டது. இந்த கலகங்களை அடக்குவதற்கு பதில், மேலும் மேலும் அதிகமாக கட்சிகளுக்குள் ஆத்திரமேற்படுத்தவும், கலகத்தைப் பரப்பவும் அவன் 93-வது பிரிவு ஆட்சியை உபயோகப்படுத்தினன்.

லாகூர், முல்தான், ராவல்பிண்டி, அமிருதசரஸ், ஜலந்தர், ஆகிய ஐந்து ஜில்லாக்களில்தான் கலவரம் வெகு விரைவாகவும் உக்கிரமாகவும் பரவிற்று. அந்த ஐந்து ஜில்லாக்களிலும் போலீஸ் டிபுடி கமிஷனர்களாக இருந்தவர்கள் பிரிட்டிஷ்காரர்கள்.

எப்படி ஜென்கின்ஸ் கலகத்தைப் பரப்பினுன் என்பதற்கு சில உதாரணங்களேத் தருகிருேம்:

லாகூரிலும் அமிருதசரஸிலும் கத்திக்குத்து, கொலே, கொள்ளே முதலியவை நடந்துகொண்டிருந்தன.

அப்போது அமிருதசரஸில் நாலுநாட்கள் ஊரடங்கு சட்டம் பிறப்பிக்கப்பட்டிருந்தது சாக்பிராக்தாஸ் என்ற பகுதியில் சீக்கியர்களால் முஸ்லிம்கள் கொல்லப்பட்டனர் என்ற செய்தி வெளி உலகத்துக்குத் தெரியாது. 30 மைலுக்குள் உள்ள லாகூர் வாசிகளுக்குக்கூட தெரியாது. ஆனுல் அந்த செய்தி வெகு தூரத்திலுள்ள ராவல்பிண்டியில் டாம்டாம் போடப்பட்டது! அந்த செய்தியைச் சொல்லி முஸ்லிம்களுக்கு மேடைகளில் ஆத்திரமூட்டப்பட்டது. எப்படி அவ்வளவு விரைவாக அந்த செய்தி அங்கு சென்றது? பத்திரிகைகளும், செய்தி ஸ்தாபனங்களும் ஜென்கின்ஸின் அதிகாரிகளால் மிகவும் கடுமையாக தணிக்கை செய்யப்பட்ட அந்த சமயத்தில், அமிருதசரஸிலும் லாகூரிலும் நடந்த கலவரங்களேப் பற்றியசெய்தி வெளியில் அனுப்பப்படக்கூடாது என்று தடுக்கப்பட்டிருந்த அந்த நேரத்தில், எப்படி வெகு தூரத்திலுள்ள ராவல் பிண்டிக்கு அது சென்றது? ஜென்கின்ஸ்தான் இதற்கு பதில் சொல்வான்.

ராவல்பிண்டியில் என்ன நடந்தது? "கலவரம் எற்படும் போலிருக்கிறது; உடனே முன்னெச்சரிக்கையாக அதைத் தடுக்க நடவடிக்கை எடுக்கவேண்டும்" என்று முஸ்லிம் லீக் தலேவர்களும் மற்ற கட்சிகளின் தலேவர்களும் பிரிட்டிஷ் டெபுடி கமிஷனரைப் பார்த்து வற்புறுத்தினுர்கள். அப்போது, "நான் நிலேமையை உஷாராக கவனித்துவருகிறேன்" என்று அவர்களிடம் அவன் கூறினுன். அடுத்தநாள் காலேயில் கத்திக்குத்து ஆரம்பமாயிற்று. உடனே தலேவர்கள் மீண்டும் அவனேச் சந்தித்தனர். கடுமையான நடவடிக்கை எடுக்காவிட்டால், கலவரம் கிராமப்புரங்களுக்கும் பரவிவிடும் என்று அலறிச் சொன்னுர்கள். "அப்போது நான் அவசியமான நடவடிக்கைகளே எடுத்துவருகிறேன்; நீங்கள் பீதியடையாமல் அமைதியாக இருங்கள்" என்று டிபுடி கமிஷனர் பதில் கூறினுன். 5ம் தேதியன்று ராவல்பிண்டியை சுற்றி, கிராமப்புறத்தில் மிகப்பெரிய அளவில் கலவரம் மூண்டது. ஜனக்கூட்டங்கள் கொள்ளே, கொலே, தீவைத்தல், கேவலமான அட்டுழியங்களேச் செய்வது முதலியவற்றில் ஈடுபட்டிருந்தன. அங்கிருந்த காங்கி

ரஸ் தலைவர்கள் அலறிப் புடைத்துக்கொண்டு டிபுடி கமிஷனரிடம் மீண்டும் ஓடினர்கள். மைனரிட்டியினரைக் காப்பாற்ற கடுமையான நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று மன்றாடினர். அப்போது அந்த டிபுடி கமிஷனர் என்ன பதில் கூறினன் தெரியுமா?

"போங்கள்! சர்தார் பட்டேலிடமும், பண்டிட் நேருவிடமும் போங்கள்! இன்றைக்கு அவர்கள்தான் சர்க்கார். பிரிட்டிஷ்காரர்கள் வெளியேறவேண்டுமென்று நீங்கள் சொல்கிறீர்கள். பின்னே என் உதவிகேட்டு பிரிட்டிஷ் காரர்களிடம் வருகிறீர்கள்?" என்றான்.

மாக்டொனல்ட் என்பவன் பஞ்சாப் சர்க்காரின் பிரதம காரியதரிசியாக இருந்தான். அவனை சில இந்து-சீக்கிய தலைவர்கள் சந்தித்தனர். கலவரத்துக்கு ஆளாகி ஓடிவந்திருந்த அகதிகளின் துயரங்களை அவனுக்கு எடுத்துக் கூறினர். அவர்களை எங்கேயாவது தங்கச் செய்ய சர்க்கார் அவசரமாக உதவியளிக்கவேண்டுமென்று கேட்டனர். அப்போது அந்த மாக்டொனல்ட் என்ன பதில் கூறினன் தெரிரிமா?

"வீணாகக் கவலைப்படாதீர்கள்! ராவல்பிண்டி அட்டூழியங்கள் சும்மா போய்விடாது! விரைவில் ராவல்பிண்டிக்காக மத்திய பஞ்சாபிலும் கிழக்குப் பஞ்சாபிலும் பழிவாங்கப் படும். அப்போது அதைப்பார்த்து அந்த அகதிகள் தங்கள் துயரங்களை மறந்துவிடுவார்கள். கவலைப்படாமல் போங்கள்!" என்றான்.

அவனுக்குத் தெரியும் என்ன நடக்கப்போகிறதென்று. பழி வாங்கும் முறையில் கலகம் பரவுவதை அவன் வரவேற்றான் என்றும் தெரிகிறது.

இவ்விதம்தான் பஞ்சாபில் பிப்ரவரியிலிருந்து ஜூன்வரை கலகங்கள் பரப்பப்பட்டன. அடுத்த கட்டத்துக்கு அடிகோலப் பட்டது. இவ்விதம்தான் பிரிட்டிஷ் அதிகாரவர்க்கம் பிரதான தீவட்டிக்காரனக வேலைசெய்தது; முதலில் தீவைப்பது; பிறகு அதைப் பரப்புவது.

## பழிவாங்குவதற்கு ஆயத்தம்

மாக்டொனல்ட் முன்கூட்டியே கூறியதுபோல, பழிவாங்க வேண்டுமென்ற வெறியை மத்திய பஞ்சாபிலும் கிழக்குப் பஞ்சாபி

லும் இந்துக்களிடையே ராஷ்ட்ரீய சுயம் சேவக் சங்கத்தினரும் சீக்கியர்களிடையே அகாலிகளும் தூண்டிவிட ஆரம்பித்தனர்.

அகாலி தலைவர்கள் கடந்த சில வருடங்களாக பாட்டியாலா, பரீத்கோட் முதலிய சமஸ்தான சீக்கிய ராஜாக்களுடன் கைகோர்த்துக் குலாவி வந்தனர். இவ்விதம் ராஜாக்களுடன் சேர்ந்ததாலேயே அவர்கள் "நாங்கள் காங்கிரசுடனோ, அல்லது லீகுடனோ சேரமாட்டோம்" என்று சொல்லிவந்தனர். தங்களுடைய கோரிக்கைகளை அடைய காங்கிரஸையோ, லீகையோ அணுகாமல், பிரிட்டிஷாரை அணுகினர்.

ராவல்பிண்டியில் அடிபட்டுவந்த அகதிகளின் துயரக் கதைகளை சீக்கிய விவசாயிகளுக்கு ஆத்திரத்தைக் கிளப்ப அகாலி தலைவர்கள் உபயோகப்படுத்தினர். அகதிகளை ஒவ்வொரு குருத்வாராவுக்கும் அனுப்பி துயரக்கதைகளைப் பரப்பினர். "ஷாஹிதிதால்" (தியாகிகள் படை) என்று ஒவ்வொரு கிராமத்திலும் படைகளை அமைக்க ஆரம்பித்தனர். ஒவ்வொரு யூனிட்டிலும் 16 பேர். அவர்களில் 6 பேருக்கு துப்பாக்கிகள் கொடுத்தனர். மீதியுள்ளவர்களுக்குக் கத்திகளையும் ஈட்டிகளையும் கொடுத்தனர். அதோடு, குதிரை சவாரிசெய்து தாக்கும் படைகளையும் அமைத்தனர். சில நாட்களில் இராணுவ மோட்டார் லாரிகள், ஜீப்கள் முதலியவற்றைக் கொண்டு வந்தனர். இந்த வேலையில் அவர்களுக்கு ராஜாக்கள் மட்டுமல்லாமல், மஜிதா, ஹரீந்தர சிங் போன்ற அமிருதசரஸ் ஜில்லாவிலுள்ள நிலச்சுவான்தார்கள் நிரம்ப உதவி செய்தனர்.

நகரங்களில் ராஷ்ட்ரிய சுயம் சேவக் சங்கம் இதேபோல் வேலைசெய்தது. பஞ்சாபில் எப்போதுமே காங்கிரஸ் வியாபாரிகளிடையேயும், மத்தியதர வர்க்கத்தினரிடையேயுமே அதிக செல்வாக்குடன் இருந்துவந்ததால், சாதாரண இந்து ஜனங்களிடம் ஆர். எஸ். எஸ். சுலபமாக வேலைசெய்ய முடிந்தது. அதோடு, பிரிட்டிஷ் தாசர்களான யூனியனிஸ்ட்களுடன் சேர்ந்து கூட்டு மந்திரி சபை அமைத்த பிறகு, காங்கிரஸின் செல்வாக்கு ரொம்ப குறைந்துவிட்டது. இது போதாதென்று, பாகிஸ்தான் கோரிக்கையையும் லீகையும் எதிர்த்து தீவிரமாக சண்டை போட்டு வந்ததால், இந்த நெருக்கடியான சமயத்தில், பிரிவினையை ஒப்புக்கொள்ளும் திசையில் அது சென்றபோது, ஆர். எஸ். எஸ். காரர்களை எதிர்த்து அதற்குக் கண்டிக்க நாக்கில்லாமல் போயிற்று. இவ்

விதம் ஆர். எஸ். எஸ். சுலபமாக நகரங்களில் தலைமைப் பதவியைக் கைப்பற்றிக் கொண்டுவிட்டது. அகண்ட "ஹிந்துஸ்தானை பலவந்தமாக அடைவோம்" என்று கோஷித்து பழிக்குப்பழி உணர்ச்சியைத் தூண்டிவிட்டது. நகரத்திலிருந்த பெரிய கள்ள மார்க்கெட்காரர்கள் எல்லோரும் அதற்கு ஆதரவளித்து உதவி செய்தனர். அமிருதசரஸிலுள்ள கோடீஸ்வரனான பாவா குர்முக் சிங், மிகப் பெரிய இயந்திரத் தொழில் முதலாளியான கோகுல்சந்த் நராங் ஆகியவர்கள் அதன் போஷகர்களில் இருவர்; பழைய வகுப்பு வெறியனான ராய்பகதூர் பத்ரிதாஸ் என்பவன்தான் அதன் தலைவன். அது இந்தியா முழுவதிலும் ஒரு தொண்டர் படைபோல் திரட்டப்பட்டுள்ளது. பஞ்சாபில் தன் உறுப்பினர்களுக்கு அது முதலில் கட்டாரிகளையும் போர் வாள்களையும் கொடுத்தது. விரைவில் ரிவால்வர்கள், துப்பாக்கிகள், கைகுண்டுகள் முதலியவற்றையும் அதன் உறுப்பினர்கள் பெற்றனர். அதோடு, தாங்களே பாம்களை உற்பத்தி செய்யவும் அவர்கள் ஏற்பாடு செய்தனர்.

இதேபோல், மறுபக்கத்தில், லாகூரில் முஸ்லிம் லீக் நேஷனல் கார்ட் படையினர் ஆயுதங்களைத் தரித்து வந்தனர். பஹவல்பூர் நவாபிடமிருந்தும், எல்லைப்புற மாகாணத்திலிருந்தும் அவர்கள் போர் ஆயுதங்களைக் கொண்டுவந்தனர். சர் பெரோஸ் கான் நூன் போன்ற வடிகட்டிய ஏகாதிபத்திய தாஸர்களான ஜமீன்தார்கள் எல்லோரும் இவர்களுக்கு பணமளித்து உதவி செய்தனர்.

## சமஸ்தானங்களில் தயாரிப்பு

அந்த வகுப்புவாத கொலைகாரர் படைகள் யாவும் நவீன போராயுதங்களைத் தரித்தன.

திடீர்திப்பென்று பஞ்சாபில் ஆயிரக்கணக்கில் துப்பாக்கிகள், கைகுண்டுகள், 'மெஷின் கன்'கள், 'ஸ்டென் கன்'கள், இயந்திர பீரங்கிகள் முதலியன எங்கும் காணப்பட்டன. அவை எங்கிருந்து வந்தன? பாட்டியாலா, ஜிந்த், நாபா, பரீத்கோட், மலகோதலா, பஹவல்பூர், கபூர்தலா முதலிய இந்து—முஸ்லிம்—சீக்கிய சமஸ்தானங்கள் தத்தம் வகுபபுவாத ஸ்தாபனங்களுக்கு அவற்றை சப்ளை செய்தன.

அவை அந்த சமஸ்தானங்களில் உற்பத்தி செய்யப்பட்டவை அல்ல. பிரிட்டனிலும் அமெரிக்காவிலும் உற்பத்தியானவை. அப்படியானுல், அந்த ராஜாக்களுக்கு அவை எப்படி கிடைத்தன?

யுத்தகாலத்தில் இந்தியாவில் பல பாகங்களிலும் ஏராளமாக ஆயுத கிடங்குகள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. அவை இரண்டு வகைப்படும். ஒன்று, போர்முனைக்கு சப்ளை செய்யும் கிடங்குகள். இன்னெருவகை, பிரிட்டிஷ் படைகள் வாபஸ்வாங்க நேர்ந்தால் எதிரி படைக்கு பின்னுல் நின்று கொரில்லா யுத்தம் தொடுப்பதற்காக ஆங்காங்கே ஏற்படுத்தப்பட்ட ரகசிய கிடங்குகள். இந்த ரகசிய கிடங்குகள் எங்கெங்கே இருக்கின்றன என்பது இராணுவ தலைமையில் உள்ள மிகவும் உயர்ந்த பிரிட்டிஷ் அதிகாரிகளைத் தவிர வேறு யாருக்கும் தெரியாது.

யுத்தம் முடிந்த பிறகும், அந்த இரகசியத்தை பிரிட்டிஷ் அதிகாரிகள் யாரிடமும் கூறவில்லை.

காபினட் தூதுகோஷ்டி வந்தபிறகு, கடற்படையினர் கலகம் நடந்த பிறகு, அந்த கிடங்குகளில் இருந்த ஆயுதங்களைத் திருட்டுத்தனமாக ராஜாக்களுக்கும், நவாப்புகளுக்கும், ஜமீன்தார்களுக்கும் அனுப்பி வைத்தனர்.

இதைத் தவிர, டில்லி, ராவல்பிண்டி, கல்கத்தா முதலிய இடங்களிலிருந்த ஆயுதக் கிடங்குகளிலிருந்து பகிரங்கமாகவே அவர்களுக்கு ஆயுதம் விற்கப்பட்டது.

இவ்விதம் ஆயுதங்களை சப்ளை செய்ததோடு, ராஜாக்கள் ஏராளமான அகதிகளைத் தத்தம் சமஸ்தானங்களுக்குக் கொண்டு வந்தனர். அவர்களை உபயோகப்படுத்தி ஸ்தல ஜனங்களுக்கு பழிவாங்கும் உணர்ச்சியை உண்டுபண்ணச் செய்தனர்.

உதாரணமாக, பாட்டியாலா மகாராஜா தன் சமஸ்தானத்தில் ராவல்பிண்டி அகதிகளுக்கு ஒரு பெரிய நிவாரண முகாமை ஏற்படுத்தினுன். ஆயிரக்கணக்கான அகதிகளுடன், பணக்கார லேச்சுவான்தார்கள் வியாபாரிகள் முதலியவர்கள் சென்றனர். அப்பணக்கார அகதிகள் சமஸ்தான பாங்கில் சுமார் 8 கோடி ரூபாய் டிபாஸிட் செய்தனர் என்று கூறப்படுகிறது. அங்கிருந்து அகதிகள் அட்டூழியக் கதைகளைப் பரப்பினர். தங்களுக்கு உதவியளித்த மகாராஜாவைப் போற்றிப் புகழ்ந்தனர்.

அகாலி கூட்டத்திற்கு பரீத்கோட் சமஸ்தானம் அநேக 'ஜீப்' கலா அளித்தது.

முஸ்லிம் நேஷனல் கார்ட்களுக்கு பஹவல்பூர் ஆயுதங்களைக் கொடுத்தது.

கபூர்தலா, ஆர். எஸ். எஸ். கூட்டத்துக்கு பயிற்சி முகாமை ஏற்படுத்திக் கொடுத்தது.

இவ்விதம் இந்திய சமஸ்தானங்கள் யுத்த தயாரிப்புகளில் ஈடு பட்டன. லக்ஷக்கணக்கான ஜனங்களைக் கொல்லும் யுத்தத்திற்கு தயாரிப்பு !

## நகரங்களில்

பழிக்குப்பழி வாங்கவேண்டுமென்ற பிரசாரத்தையும், மைனாரிட்டியினரைக் கொல்லும் யுத்தத்துக்கு நடந்த தீவிரமான தயாரிப்புகளையும் ஜென்கின்ஸ் கொஞ்சங்கூட தடுக்கவில்லை.

லாகூரிலும், அமிருதசரசிலும் சிறுபான்மையினர் கத்தியால் குத்தப்பட்டுக்கொண்டே யிருந்தனர். அதை போலீஸ் தடுக்க வில்லை. இதற்குமாருக அடிக்கடி ஊரடங்கு சட்டத்தைப் பிறப்பித்தது! அப்போது யோக்யர்களை வீட்டிலடைந்துகிடக்க செய்து அயோக்கியர்களை வெளியில் நடமாடி கொள்ளையடிக்கவிட்டது.

எப்ரலிலிருந்து ஆகஸ்டு மாதம்வரையில் அமிருதசரஸில் இருந்த யாரைக் கேட்டாலும் சொல்லுவார்கள், எப்போது ஊரடங்குச் சட்டம் பிறப்பிக்கப்பட்டதோ, அப்போதுதான் போலீஸாரின் உதவியுடன் ரௌடிகள் மிகவும் அதிகமாக பெரிய இடங்களில் சூறையாடி தீ வைத்தனர் என்று.

அந்த சந்தர்ப்பங்களில் தீயை அணைப்பதற்கு வெளியில்வந்த கடைக்காரர்களையும் மற்ற நேர்மையானவர்களையும் போலீஸ் சுட்டது; உண்மையில் தீ வைத்த கூட்டங்களை சுடவில்லை.

இவ்விதம் செய்த போலீஸ் படைக்குத் தலைவன் யார்? சர் ஜான் பென்னட் என்ற போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல்.

உதாரணமாக, 'ட்ரிபியூன்' என்ற பத்திரிகை தலையங்கத்தில் கீழ்க்கண்டவாறு கேட்டது: "தீயை அணைத்துக்கொண்டிருந்த போது, ஒருவர் போலீஸாரால் சுடப்பட்டார். அதே சமயத்தில் அவர் என்ன செய்யமுடியும்?"

லாகூரில் இந்துக்களும் சீக்கியர்களுமே மைனுரிட்டியினர். தாக்கப்பட்டவர்கள் அவர்கள். ஆனுல் போலீஸ் அவர்களேயே அதிகமாக கைது செய்து சிறையில் தள்ளிற்று.

ஷாலிம்கேட் என்ற இந்துக்களின் வட்டாரத்தில் மிகப் பெரிய தீ மூட்டப்பட்டது. அப்போது தீ மூட்டியவர்களுடன் இருந்து உத்திரவுகளே சரிபார்த்த பேர்வழிகள் யார் தெரியுமா? எம். ஜி. சீமா என்ற அதிகாரி. அவன் லாகூர் ஜில்லாவுக்கு உதவி மாஜிஸ்ட்ரேட். அவனுடைய மேற்பார்வையில் ஏராளமாக பெட்ரோலே கொட்டி, ஒரு பஜார் முழுவதையும் முஸ்லிம் போலீஸ்காரர்கள் கொளுத்திவிட்டார்கள். தீ எரிந்து கடைகள் சாம்பலாகும்வரை அங்கேயேயிருந்து வேடிக்கை பார்த்து வந்தனர்.

ராஷ்ட்ரீய சுயம் சேவக் சங்கத்தினர் முதன் முதலில் பாம்களேயும், சுழல் துப்பாக்கிகளேயும், ரிவால்வர்களேயும் உபயோகப் படுத்தி தொடுத்த மிகப்பெரிய தாக்குதல், எப்ரல் மாதத்தில் லாகூரில் ஒரு பகுதியாகிய ராஜ்காட் என்ற முஸ்லிம் வட்டாரத்தின் மீது நடந்தது. அதில் அநேக முஸ்லிம்கள் கொல்லப்பட்டனர்.

அப்படி அவர்கள் தாக்கப் போகிருர்களென்பது அந்த வார்டின் போலீஸ் அதிகாரிக்கு தெரியும் என்றும், தாக்குதலுக்கு 15 நிமிடங்களுக்கு முன்பு அவன் அக்கூட்டத்தின் தலேவனேப் பிடித்தான் என்றும், ஆனுல் ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டான் என்றும், எல்லா ஜனங்களும் கூறினுர்கள். இந்த செய்கைக்காக அந்த அதிகாரியை மேல் அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்தனர். ஆனுல் சில நாட்களுக்குள் அவனே மன்னித்து மீண்டும் வேலே பார்க்கச் சொல்லிவிட்டனர்.

அமிருதசரவிலும் இப்படியே நடந்தது. கலகக்காரர்களுக்கு உதவுவதும், நிரபராதியான ஜனங்களேத் தண்டிப்பதுமே போலீஸ் செய்த வேலே.

இவ்விதம் வேறு எந்த நகரமும் எரியாத அளவுக்கு லாகூரும் அமிருதசரஸும் எரிந்தன. நகரத்தில் இருப்பது அசாத்தியமாகி விட்டபடியால், மெதுவாக அகதிகள் நகரத்தை விட்டுப் புறப்பட்டனர்.

## கிராமப்புறங்களில்

தோபா பிரதேசத்தில், தேசபக்தி மிகுந்த சீக்கிய விவசாயிகளுக்கு சுலபமாக வெறியூட்ட முடியவில்லே. அகாலிகள் அவர்

களிடம் அகதிகளின் துயரங்களை வர்ணித்து பழிவாங்கக் கிளம்ப 'வேண்டுமென்று கூறியபோது, அந்த விவசாயிகள் கேட்டனர்: 'ராவல்பிண்டியில் சீக்கியர்களை முஸ்லிம்கள் கொன்றது அநியாயம் என்றால், இங்கு நாம் முஸ்லிம்களைக் கொல்வது எப்படி நியாயமாகும்?'' என்று.

ஆகவே, அந்த விவசாயிகளைக் கலகத்தில் இழுக்க அகாலிகள் பல்வேறு தந்திரங்களைக் கையாண்டனர்.

உதாரணமாக, ஏப்ரல் மாதத்தில், அகாலிகள் இரகசியமாக அநேக தோபா கிராமங்களில் விவசாயிகளுடைய குடிசைகளுக்கும், தானிய களஞ்சியங்களுக்கும் தீ வைத்தனர். தீ பிடித்தவுடன் முஸ்லிம்கள் தீ வைத்துவிட்டு ஓடிவிட்டதாக கதைகளைப் பரப்பினர்.

இதேபோல் போலீஸும் செய்தது. மோகா நகரத்துக்கு அருகில், கோக்ரி என்ற கிராமத்தில், கோதுமை களஞ்சியம் ஒன்றுக்கு தீ வைத்தபோது, ஒரு போலீஸ்காரன் கையும் மெய்யுமாக பிடிக்கப்பட்டான்.

இவ்வித செய்கைகளைத் தொடர்ந்து, மேமாத முடிவில், ஆங்காங்கே தனியாக தென்பட்ட முஸ்லிம்களைக் கொலைசெய்யும் வேலை ஆரம்பமாயிற்று.

அதற்கு பிறகு, வெகு வேகமாக வீதியை கிழித்துக்கொண்டு செல்கிற 'ஜீப்'களில் ஆயுதமேந்திய அகாலிகள் கிராமம் கிராமமாக சென்றனர். அப்போது கிராமத்திலிருந்த முஸ்லிம்கள் தங்களுடைய ஊரிலிருந்த சீக்கிய சகோதரர்களைப் பார்த்து துளிகூட பயப்படாவிட்ட போதிலும், ஆயுதமேந்திய அகாலிகளைப் பார்த்து பயந்தனர். உள்ளூர் ஜனங்கள் தங்களைக் கொல்லாவிட்டபோதிலும், வெளியூர் ஆட்கள் நிச்சயம் கொன்றுவிடுவர் என்று நினைத்தனர். ஆகவே, முஸ்லிம்கள் மெதுவாக கிராமங்களைவிட்டு வெளியேறி, பக்கத்தில் முஸ்லிம்கள் ஏராளமாக சேர்ந்துவசித்த கிராமங்களுக்குப் போனார்கள். இவ்விதம், பல கிராமங்களிலிருந்த முஸ்லிம்கள், சில குறிப்பிட்ட இடங்களில் குவிந்தனர்.

இவ்விதம், கிராமங்கள் இரண்டாகப் பிரிந்த பிறகு, போலீஸுக்கும் அகாலிகளுக்கும் தேசபக்தி மிகுந்த சீக்கிய விவசாயிகளைக் கலகத்தில் ஈடுபடுத்துவது சுலபமாயிற்று. போலீஸ் அதிகாரிகள் சீக்கிய விவசாயிகளிடம் சென்று, பக்கத்தில் முஸ்லிம்கள் குவிந்துகிடந்த கிராமத்தைச் சுட்டிக்காட்டி, "அவர்கள் உங்களை

தாக்குவதற்காக ஏராளமாக ஆயுதங்களைத் திரட்டி வருகின்றனர்" என்று பொய் சொன்னார்கள். "நீங்கள் உங்களுடைய தற்பாதுகாப்புக்கு உடனடியாக ஆயுதங்களைச் சேர்க்க வேண்டும். இல்லையேல், நீங்கள் சாவீர்கள்" என்று பீதியை உண்டுபண்ணினர். இவ்விதம் அந்த கிராமத்து ஜனங்கள் தாக்கப் போகிறார்கள் என்று நம்பி இந்த கிராமத்து ஜனங்களும், இவர்கள் தாக்குவார்கள் என்று நம்பி அவர்களும் ஆக எல்லா கிராமங்களிலும் யுத்தத்துக்கு வேண்டிய தயாரிப்புகள் ஜன்னி வேகத்தில் செய்யப்பட்டன. கத்திகள், கட்டாரிகள், ஈட்டிகள் எல்லாம் அவசர அவசரமாக செய்யப்பட்டன.

இப்படி இருந்த போதிலும், விவசாயிகள் கலகத்தில் ஈடுபடவில்லை. போலீஸ் அதிகாரிகள் இன்னொரு தந்திரத்தைக் கையாண்டனர்.

ஒரு கைக்கூலியை பிடித்து கிராமத்தில், "அதோ அவர்கள் தாக்க வருகிறார்கள்" என்று கூச்சல்போட செய்தனர். இதே போல் பக்கத்திலிருந்த முஸ்லிம் கிராமத்திலும் கூச்சலிடச் செய்தனர். நடு ராத்திரியில் இரண்டு கிராமங்களிலும் ஜனங்கள் அலறி புடைத்துக்கொண்டு எழுந்து, ஆயுதங்களைக் கையிலெடுத்துக்கொண்டு, ஊருக்குள் நுழைந்து அக்ரமம் செய்யவிடாமல் எதிரியை வயல் வெளியிலேயே தடுத்து விரட்டிவிட வேண்டுமென்று முடிவுசெய்து, எல்லோரும் கிராமத்துக்கு வெளியில் ஓடினர். இதேபோல் பக்கத்து கிராமத்திலுள்ளவர்களும் ஓடி வந்தனர். இவர்களுக்கு அவர்கள் தாக்க வருவதாகவும், அவர்களுக்கு இவர்கள் தாக்க வருவதாகவும் பட்டது. வயல் வெளியில் ஒருவரை ஒருவர் தத்தம் கிராமத்தில் நுழையாமல் தடுக்கும் பொருட்டு கைகலந்தனர். இவ்விதம் கைகலப்பு ஏற்பட்டவுடன், எல்லோருக்குமே வெறிபிடித்துவிடுகிறதென்பது சொல்லாமலே விளங்கும்.

இப்படி கைகலப்பு ஏற்பட்டதையும், ஆயுதமேந்திய அகாலி கூட்டத்தினரைப் பார்த்து பயந்தும், முஸ்லிம்கள் மேற்கு நோக்கி ஓட்டம் பிடித்தனர். அப்போதுதான், சீக்கிய விவசாயிகளுக்கு கொள்ளை, சூறை முதலியவற்றில் ஆசை ஏற்பட்டது. ஓடுகிறவர்களுடைய உடைமைகளை அபகரிக்க வேண்டுமென்ற எண்ணம் அதிகமாயிற்று.

ஆர். எஸ். எஸ்., அகாலி தால், முஸ்லிம் நேஷனல் கார்டு, போலீஸ், இராணுவம் முதலியவற்றைக்கொண்டு எப்ரலிலிருந்து

ஜூன்வரை மூன்று மாதங்களில் இவ்விதம் அராஜகம் சிருஷ்டிக் கப்பட்டது.

## மௌண்ட்பேட்டன் சதி

இவ்விதம் பஞ்சாபை ஜென்கின்ஸ் தயார்படுத்தியவுடன், ஜூன் 2ம் தேதி மௌண்ட்பேட்டன் தன் தீர்ப்பை அளித்தான்.

இதன்படி ஆகஸ்ட் 15ந் தேதியன்று இரண்டு சர்க்கார்களிடம் அதிகாரத்தை மாற்றுவதாகக் கூறினன். காங்கிரஸ் - லீக் தலைவர்கள் ஒப்புக் கொண்டனர்.

இந்த பிரிவினை வேலையை அவன் எப்படி செய்தான் தெரியுமா ?

சாதாரணமாக ஒரு குடும்பத்தில் சொத்துப் பிரிவினை நடந்தால், முதலில் தீர்க்கவேண்டிய பொதுவான பிரச்சினைகளை எல்லாம் தீர்த்தபிறகே சகோதரர்கள் தனிக் குடித்தனம் வைப்பர். அதாவது, ஒரு வீட்டில் இருவருக்கும் பொதுவான சகல சாமான்களும் இருக்கின்றன. எந்தெந்த சாமான் யார் யாருக்குச் சொந்தம், ஒவ்வொருவருக்கும் எதெதில் அதிகாரம் உண்டு என்பனவற்றை தீர்த்துவிட்டு தனிக் குடித்தனம் வைத்தாலே, சண்டை சச்சரவின்றிப்போகும். அப்படி செய்யாமல், முதலில் தனிக்குடித்தனம் வைத்துவிட்டு, அதன் பிறகு சாமான்களை பங்கிடப்போனல் ஒவ்வொரு சாமானைப்பற்றியும் இரண்டு வீடுகளுக்குள்ளும்சண்டை நடந்துகொண்டே யிருக்கும். முன்பு ஒரு குடும்பத்திலிருந்த சச்சரவு, இரண்டு குடும்பச் சச்சரவாகும்.

இதைப்போலவே, முதலில் தனிக் குடித்தனம் வைக்கச் சொல்லி, பிறகு சொத்தை பகிரும்படி வேலை செய்தான் மௌண்ட்பேட்டன்.

- எல்லையை நிச்சயித்த பிறகு பிரிப்பதற்கு பதில், பாதிப் பாதி என்று சொல்லி பிரித்தபிறகு, எல்லையை நிச்சயிக்கும்படி செய்தான்.

- மைனரிட்டிப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு முன்னல், தனிக் குடித்தனம் வைத்த பிறகு, மைனரிட்டிகளின் உரிமைகளைத் தீர்க்க சண்டை போட்டுக்கொள்ளும்படி செய்தான்.

- தனிக் குடித்தனம் வைத்த பிறகு, சொத்துக்களை பிரிக்கும்படி செய்தான். அதாவது, இரண்டு சர்க்கார்களுக்கு

மிடையே பொதுவான விவகாரங்கள் பல இருக்கின்றன. அவை எதுவும் தீர்க்கப்படவில்லை. தீர்ப்பதற்காக ஒவ்வொன்றையும் எடுத்துக் கொள்ளுகிறபோது, இரண்டு சர்க்கார்களுக்கு மிடையே சண்டை ஏற்படும்; அல்லது அவை தீர்க்கப்படாமலிருப்பதாலே, தானாகவே அவை அந்தந்த சமயத்தில் வெடிக்கும். நேரம் பார்த்து வெடிக்கும் அந்த குண்டுகளை (TIME BOMBS) எப்படி ஏகாதிபத்தியம் வெடிக்கச் செய்கிறது என்பதைப் போகப் போகப் பார்க்கலாம்.

இந்த தீர்ப்பை கண்டவுடன் இந்திய யூனியனிலுள்ள ஜனங்கள் ஆகஸ்ட் 15 எப்போதுவரும் என்று எதிர்பார்த்தனர். ஆனால் பஞ்சாப் மக்கள் ஏற்கனவே தங்கள் தாயகம் கூறுபோடப்பட்டு விட்டதையும், அக்கூறுகளில் தாங்கள் எந்தப் பக்கம் வாழப் போகிறார்கள் என்பது இன்னும் நிச்சயிக்கப்படாமலிருப்பதையும் பார்த்தனர். ஆகஸ்ட் பதினைந்தாம் தேதிக்குள் தாங்கள் ஏதாவது செய்யாவிட்டால் தங்களுக்குப் பிடிக்காத பகுதியில் தாங்கள் தள்ளப்படுவர் என்று நினைத்தனர்.

## எல்லைப் படை

எல்லை நிர்ணயிப்பதில், "வேறு பல காரணங்களும்" கவனிக்கப்படுமென்று மௌண்ட்பேட்டன் கூறியது, எரிகிற நெருப்பில் எண்ணெய் வார்த்தது.

முஸ்லிம்கள் பாக்கிஸ்தானுக்கு அதிக பிரதேசத்தை சேர்க்கவும், ஹிந்து - சீக்கியர்கள் இந்திய யூனியனுக்கு அதிக பிரதேசங்களைச் சேர்க்கவும் கோரிக்கைகளை அதற்கேற்றாற்போல் கோஷிக்க ஆரம்பித்தனர்.

பஞ்சாபை கூறுபோட வேண்டுமென்று முதலில் வற்புறுத்தியவர்கள் அகாலிகள். இந்த செய்கையால் சீக்கியர்கள் பலவாறாக பிளக்கப்படுவர் என்பது அவர்களுக்குத் தெரியும். அப்படியிருந்தும், அவர்கள், "எங்களுக்கு மௌண்ட்பேட்டன் உறுதிகூறியிருக்கிறார். வெறும் ஜனத்தொகையைமட்டும் பார்த்து எல்லை நிர்ணயிக்கப்படாது. எந்த சமூகத்துக்கு அதிக சொத்து இருக்கிறது, அந்த சொத்து எங்கேயிருக்கிறது, எந்த சமூகத்தின் கோயில்கள் எங்கேயிருக்கின்றன என்பதுபோன்ற பல்வேறு காரணங்களைக் கவனித்து, அதற்கேற்றபடியே எல்லை நிர்ணயிக்கப்படும். இவ்விதம்

பார்க்கும்போது, நமக்கு சினுப் நதிக்கரைவரையிலும் கிடைக்கும். அல்லது, குறைந்தபக்ஷம் வளமை பொருந்திய கேனல் காலனியும், குரு நானக்குடைய நன்கானு சாஹிப் குருத்வாராவும் நிச்சயம் கிடைக்கும்" என்று ஜனங்களிடம் உறுதிகூறிக்கொண்டே இருந்தனர்.

இதேபோல் முஸ்லிம் லீக் தலைவர்கள், "பாக்கிஸ்தானுக்கு யமுனை நதிக்கரைவரையிலும் கிடைப்பதற்கு சண்டைபோடுவோம்" என்று முஸ்லிம்களிடம் கூறிக்கொண்டிருந்தனர்.

இவ்விதம் இரண்டு கட்சியினரும் தத்தம் ஜனங்களிடம் பொய்யான நம்பிக்கைகளை உண்டுபண்ணி, ஆத்திரத்தை ஒருவர்மீதொருவர் திருப்பிவிட்டனர்.

கிழக்கு பஞ்சாபோடு நிற்காமல், அகாலி தலைவர்கள் மேற்கு பஞ்சாபில் சியால்கோட், ஷெய்க்புரா, முல்தான், ராவல் பிண்டி முதலிய நகரங்களில்கூட "ஷாஹிதிதால்"களை அமைக்க ஆரம்பித்தனர். மத்திய பஞ்சாபில் முஸ்லிம்கள்மீது தொடுத்த தாக்குதல்களை நிறுத்தாமல் தொடர்ந்து தாக்கிக்கொண்டிருந்தனர்.

இந்த நிலைமையில், மேற்கு பஞ்சாப் சீக்கியர்கள் ஒரு தூது கோஷ்டியை தாராசிங்கிடம் அனுப்பினர். கிழக்குப் பஞ்சாபில் முஸ்லிம்களைத் தாக்குவதை நிறுத்தாவிட்டால், மேற்குப் பஞ்சாபில் பழிக்குப்பழி வாங்கும் வெறி தலைக்கேறிவிடும் என்றும், தாங்கள் எல்லோரும் கொல்லப்படுவர் என்றும் அந்த தூதுகோஷ்டியினர் கூறினர். தங்களுடைய உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு கிடைத்தால், பாக்கிஸ்தான் பிரதேசத்திலேயே வசிப்பதற்கு தங்களுக்கு ஆக்ஷேபனை இல்லை என்றுகூட அவர்கள் கூறினார்கள்.

ஆனால் அகாலி தலைவர்களின் கொள்கை சீக்கிய ஜனங்களின் உயிரையும் உடைமையையும் பாதுகாப்பது அல்ல. சீக்கிய ராஜாக்களுக்கு அதிக பிரதேசங்களைப் பிடித்துக்கொடுத்து, பாட்டியாலா ராஜாவின் தலைமையில் சீக்கிய ராஜ்ஜியத்தை ஸ்தாபிப்பதேயாகும்.

ஆகவே, தன்னுடைய சொந்த ஜனங்கள் மேற்குப் பஞ்சாபிலிருந்து தூதுகோஷ்டிமூலம் தெரிவித்துக்கொண்டதை உதாசீனம் செய்துவிட்டு, தாராசிங் நிரம்ப மும்முரமாக, "ரஞ்சித்சிங்கின் சீக்கிய ராஜ்ஜியத்தை மீண்டும் ஸ்தாபிப்போம்" என்ற கோஷத்தைக் கோஷிப்பதில் ஈடுபட்டிருந்தார்.

இத்தகைய சந்தர்ப்பத்தில்தான், குருதாஸ்பூர், அமிருதசரஸ், ஜலந்தர், பெரோஸ்பூர், ஹொஷியார்பூர், லூதி

யானு, லாகூர், மாண்ட்கோமரி, லயால்பூர், ஷெய்க்புரா, சியால்கோட், குஜரன்வாலா ஆகிய பன்னிரண்டு ஜில்லாக் களின் நிர்வாகத்தை கையில் எடுத்துக் கொள்வதற்காக ஒரு எல்லைப் படை அனுப்பப்படும் என்று அறிவிக்கப்பட்டது.

ஆகஸ்ட் 1-ம் தேதியன்று எல்லைப் படை நிர்வாகத்தைக் கைக்கொள்ளும் என்று தேதி குறிப்பிடப்பட்டது. அதே ஆகஸ்ட் 1-ம் தேதிதான், முஸ்லிம் கிராமங்களின்மீது ஒரு பொதுத்தாக்குதலைத் தொடுப்பதற்கு அகாலி படையினர் குறிப்பிட்ட தேதி. "ஹாஹிதிதால்" படையினரின் ஆர்கனைசராகிய ஜாத்தேதார் உதம் சிங்கினுடைய நகோக் என்ற கிராமத்தில் வசித்த முஸ்லிம்கள்மீது ஜுலை 30-ம் தேதி இரவு தாக்குதல் தொடுக்கப்பட்டது. அதுவே பொதுவாக எல்லா இடங்களிலும் தாக்குதல் தொடங்கப்படுவதற்கு அடையாளமாகக் கொள்ளப்பட்டது.

அமிருதசரஸ் ஜில்லாவில் மட்டும், ஆயுதம் ஏந்திய கூட்டத்தினர் நூற்றுக் கணக்கில் கிளம்பினர். முஸ்லிம்களைக் கண்ட இடங்களிலெல்லாம் கொன்றனர். கிராமம் கிராமமாகப் படையெடுத்துச் சென்றனர். பீஸ், தரன் தரன், மஜீதா ஆகிய பிரதேசங்கள் முதலில் தாக்கப்பட்டன. அங்கிருந்து மற்ற இடங்களுக்கு தாக்குதல் பரவிற்று.

ஆகஸ்ட் 5-ம் தேதிக்குள் அது நிரம்ப முற்றிவிட்டது. போலீஸ்காரர்களும், ஸிவில் நிர்வாக அதிகாரிகளும் தத்தம் கட்சிகளுடன் சேர்ந்துகொண்டனர். அங்கிருந்து தோபாவுக்கும் குருதாஸ்பூர் ஜில்லாவுக்கும் அது பரவிற்று.

ஆகஸ்ட் 4-ம் தேதியன்று, எல்லைப்படையின் தளபதி மேஜர் ஜெனரல் ரீஸ், லாகூரில் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தைக் கூட்டினுன். அவன் உலகமறியக் கூறினுன்: "என்னுடைய எல்லைப்படை நடுநிலைமையானது; ரொம்பப் பெரியது; எல்லா ஆபீஸர்களும் பிரிட்டிஷ்காரர்கள்; என்னுடைய இந்த இராணுவம் வெளியே புறப்படுகிறது என்ருல், வெறும் வேடிக்கைக்காகச் செல்வதில்லை. கொடுத்த வேலையை சொன்னபடி முடித்தே திரும்பும். காரியத்தில் கண்ணுயிருப்பதற்கே அவர்கள் வந்திருக்கின் கின்றனர்".

மேலும் அவன் சொன்னுன்: "இந்த இராணுவம் ஸிவில் நிர்வாக அதிகாரிகளுடன் ஒத்துழைத்த போதிலும், தன்னிஷ்டப்படி நடந்துகொள்ள அதிகாரம் பெற்றிருக்கிறது. பிரதம சேனுதிபதி

ஆக்கின்லெக்கின் நேரடியான உத்திரவுகளை நிறைவேற்று வதற்காக, அவருடைய நேரடியான தலைமையில் இருக்கிறது."

உங்களைக் காப்பாற்றுவோம் என்று பலமுறை ரீஸ் கொடுத்த வாக்குறுதிகளை ஜனங்கள் நம்பவேண்டும் என்பதற்காக, லாகூர் வீதிகளில் பிரிட்டிஷ் டாங்கிகள் ரோந்து சுற்ற அனுப்பப்பட்டன. ஆனால், கிராமங்களுக்கு போகவில்லை; நகரத்தில் அவை பவனி வந்ததைப் போட்டோ பிடித்து பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர்கள் லண்டனுக்கு பிரசாரத்துக்காக அனுப்பினர்.

உண்மையில் இப்போது பார்க்கப்போனல், அந்த எல்லைப் படை பஞ்சாபுக்கு அனுப்பப்படாம லிருந்திருந்தால், இப்போது கொல்லப்பட்ட எண்ணிக்கையைவிட மிகவும் குறைவான எண் ணிக்கையிலேயே மக்கள் கொல்லப்பட்டிருப்பர்; நாசமும் குறை வாகவே ஏற்பட்டிருக்கும். ஏனெனல், அது காரியத்தில் ஈடுபட் டபோது, மற்ற எதையும்விட கொடூரமான அழிக்கும்படையாக வேலை செய்தது.

அதன் கண்முன்னே எவ்வளவோ கடைகள் சூறையாடப்பட் டன; தீவைக்கப்பட்டன. ஆனல், அப்படி சூறையாடித் தீவைத் தவர்களில் ஒருவனைக்கூட அது கைது செய்யவில்லை; சுடவில்லை.

அதன் கண் எதிரே ஆயுதமேந்திச்சென்ற ஆர். எஸ். எஸ்., அகாலி, நேஷனல் கார்டு ஆகிய கொலைகாரப் படையினரில், ஒருவ ரிடமிருந்துகூட அது ஆயுதங்களைப் பறிக்கவில்லை. அந்த கொலை காரர்கள் எங்கெங்கே தங்களுடைய ஆயுதங்களையும், வெடிமருந்து களையும் வைத்திருக்கின்றனர் என்பது எலலோருக்கும் தெரிந்தி ருந்தும், அது அவர்களுடைய ஆயுதங்களையோ, வெடி மருந்து கிடங்குகளையோ கைப்பற்றவில்லை.

பிரிட்டிஷ் ஆபீஸர்களின் கீழிருந்த முஸ்லிம் ரெஜிமெண்ட் லீக் படையாகவும், சீக்கியர் ரெஜிமெண்ட் அகாலி படையாகவும், ஹிந்து ரெஜிமெண்ட் ராஷ்ட்ரிய சுயம் சேவக் சங்கத்தின் படை யாகவும் மாறி, ஜனங்களைத் தாக்கின.

லாகூர் ரயில்வே ஸ்டேஷனில் முஸ்லிமல்லாத அகதிகள் எப்படியாவது தப்பி ஓட முயற்சிசெய்து கொண்டிருந்தபோது, பிரிட்டிஷ் ஆபீஸரின் கீழிருந்த ஒரு பலூச்சிஸ்தான்ரெஜிமெண்ட், அவர்கள் எல்லோரையும் சுட்டு படுகொலை செய்தது. இன்னொரு புறம், முஸ்லிம் நேஷனல் கார்டுகள் அகதிகளை படுகொலை செய்த போது அந்த ரெஜிமெண்ட் சும்மா வேடிக்கை பார்த்துக்கொண்

டிருந்தது. இதனுல் ஆகஸ்ட் 13, 14 தேதிகளில் மட்டும் 3,000-லிருந்து 4,000 அகதிகள்வரை கொல்லப்பட்டனர்.

அதே ரயில்வே ஸ்டேஷனில், அதே எல்லேப்படையைச் சேர்ந்த டோங்ரா ரெஜிமெண்ட், பிரிட்டிஷ் ஆபீஸரின்கீழ் நின்று, அமிருதசரஸிலிருந்து உயிர்தப்பிப் பிழைப்பதற்காக லாகூருக்கு ரயிலில்வந்த முஸ்லிம் அகதிகளேச்சுட்டு படுகொலேசெய்தது.

அந்த இரண்டு ரெஜிமெண்ட்களும் எல்லேப்படையின் பகுதிகள்; இரண்டுக்கும் தளகர்த்தர்கள் பிரிட்டிஷ்காரர்கள்; இரண்டும் பிரதம சேனுதிபதி ஆக்கின்லெக்கின் "நேரடியான உத்திரவுகள்"படி நடந்தன; இரண்டும் நிராயுதபாணிகளான அகதிகளே "நடுவு நிலேமை பிறழாமல்" சுட்டுக்கொண்டிருந்தன! அதே போல் அமிருதசரஸ் ரயில்வே ஸ்டேஷனில், முஸ்லிம் அகதிகளேப் படுகொலே செய்துகொண்டிருந்த அகாலி கொலேகாரர்களே, அதே எல்லேப்படையின் பகுதியாகிய சீக்கியர் ரெஜிமெண்ட் சுடாமல், பாதுகாத்து நின்றது!

ஷெய்க்புராவில் அதே எல்லேப்படையின் பலூச்சி ரெஜிமெண்ட், ஆயிரக் கணக்கில் சீக்கியர்களேயும் ஹிந்துக்களேயும் மெஷின் கன்களினுல் சுட்டுக் கொன்றது.

இவைதான் பிரிட்டிஷ் தளபதிகளின் உத்திரவுப்படி எல்லேப் படை செய்த பாதக அட்டூழியங்கள்.

## என்றென்றும் காணுத கொடூரங்கள்

இந்த படுகொலேகள் ஆகஸ்ட் 11ம் தேதியன்று உச்சியை எட்டின. அன்று அமிருதசரஸ் ஜில்லாவில், முஸ்லிம் போலீஸ் காரர்கள் எல்லோரும் தங்கள் ஆயுதங்களேப் போலீஸ் ஸ்டேஷனில் கொடுத்துவிட்டு, ஒருவாரம் லீவ் எடுத்துக்கொண்டு விட வேண்டுமென்றும், அடுத்த வாரத்தில் லாகூரில் ஆஜராக வேண்டு மென்றும் மேல் அதிகாரிகள் உத்திரவு போட்டனர். இந்த உத்திரவு அந்த ஜில்லாவில் எவருக்கும் தெரியாது.

ஆனுல், 11ம் தேதியன்று போடப்பட்ட அந்த உத்திரவு, 9, 10 தேதிகளிலேயே மேற்கு பஞ்சாபில் உள்ள குஜரன்வாலாவில் தெரிந்துவிட்டது! எப்படித் தெரிந்தது? யார் சொல்லியனுப்பியது? "இந்து - சீக்கிய போலீஸ்காரர்கள் எல்லா முஸ்லிம்களேயும் கொல்வதென்று முடிவு செய்துவிட்டனர். ஆனுல், அங்கு முஸ்லிம்களேக் காப்பாற்ற ஒரு முஸ்லிம் போலீஸ்காரன்கூட

இருக்கமாட்டான்!" என்ற வதந்தி 9, 10 தேதிகளிலேயே ஜனங்களிடம் பரவிவிட்டது. பழிக்குப் பழிவாங்க முஸ்லிம்கள் கிளம்பி விடுவர் என்பதை எல்லோரும் எதிர்பார்த்தனர்! ஜென்கின்ஸின் அதிகாரிகள், எல்லைப்படை பிரிட்டிஷ் தளபதிகள் ஆகியவர்களே அந்த வதந்தியை அங்கு பரப்பியவர்கள்!

கிழக்குப் பஞ்சாபில் முஸ்லிம் போலீஸ்காரர்களும், மேற்கு பஞ்சாபில் சீக்கிய போலீஸ்காரர்களும் நிராயுதபாணிகளாக்கப் பட்டு வெளியேற்றப்படப் போகின்றனர் என்ற செய்தி இருபுறங்களிலும் மைனாரிட்டி மக்களிடையே பெரும் பீதியை உண்டு பண்ணிவிட்டது. ஏனெனில், வகுப்புவாத படுகொலையில் போலீஸ் காரர்கள் முழுப்பங்கு எடுத்துக் கொள்கிறார்கள் என்பது அவர்களுக்கு தெரியுமாதலால், தங்களுடைய மதத்தினரான போலீஸ்காரர்களிட மிருந்தாவது தங்களுக்குக் கொஞ்சம் பாதுகாப்பு கிடைக்கக்கூடும் என்ற ஒரே நம்பிக்கையும் அவர்களுக்கு மனதைவிட்டு அகன்று, கிலிபிடித்தவர்களாகி விட்டனர்.

இவ்விதம் அமிருதசரஸிலிருந்து முஸ்லிம்களும், லாகூரிலிருந்து இந்து - சீக்கியர்களும் எப்படியாவது ஓடி உயிர் தப்பித்துக் கொள்ளலாம் என்றெண்ணி ஆயிரம் பதினாயிரக் கணக்கில் இரண்டு நகரங்களையும்விட்டு அலறிப்புடைத்துக்கொண்டு கிளம்பினர். வழியில் அவர்களை ஆயுதமேந்திய கொலைகாரர்கள் தாக்கினார்கள். ஓடுகிற அகதிகள்மீது 'பாம்கள்' வீசப்பட்டன; சுழல் துப்பாக்கி குண்டுகளும், ரிவால்வர் குண்டுகளும் அவர்களைச் சுட்டு சரித்தன; பலர் ஈட்டிகளால் குத்தப்பட்டும், வாள்களால் சீவப் பட்டும் வழியில் வீழ்ந்தனர்.

அந்த ஆயுதமேந்திய கொலைகாரர்கள் வயிறுமுட்ட சாராயத்தைக் குடித்துவிட்டு, இந்து-சீக்கிய போலீஸ்காரர்களாலும் எல்லைப் படையினராலும் பாதுகாக்கப்பட்டு, இரத்தம் குடிக்க எங்கெங்கும் அலைந்து திரிந்துகொண்டிருந்தனர். இதேபோல் லாகூரில் முஸ் லிம் நேஷனல் கார்டுகள் திரிந்துகொண்டிருந்தனர்.

அந்தப்புறம் லாகூர் எரிந்ததுபோல, இந்தப்புறத்தில் அமிருதசரஸ் முழுதும் எரிந்துகொண்டிருந்தது. வெறி உச்ச நிலையை எட்டிவிட்டது. சூறையாடுவது தெய்வ வழிபாடாகக் கருதப் பட்டது. கொள்ளையடிக்காதவர்கள் வெகுசிலரே.

ஆகஸ்ட் 10-லிருந்து எங்கும் எந்நேரமும் வெடிசப்தம். ஆயிரம் பதினாயிரக்கணக்கில் குண்டுகள், பாம்கள் வெடித்தன. இந்து-

முஸ்லிம் - சீக்கிய கொலைகாரர்களின் குண்டுகள் ஜனங்களைத் தாக்கியபோது, எல்லைப்படையினரின் குண்டுகள் ஆகாயத்தைப் பார்த்துசுடப்பட்டது. அல்லது ரெஜிமெண்ட் எந்த மதத்தினரோ அதற்கு வேறுபட்ட மதத்தினரின்மீது சுடப்பட்டது.

## அதிகார மாற்றம்

இப்படி பஞ்சாப்—அழகிய பஞ்சாப்—வானம் முட்ட கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்த சமயத்தில்தான், ஆயிரம் பதினாயிரக் கணக்கில் ஜனங்கள் இங்குமங்கும் ஓட முயற்சித்துக் கொண்டிருந்த நேரத்தில்தான், ஆகஸ்ட் 15ம் தேதி வந்தது. டில்லியில் நேருஜி சர்க்காரிடமும், கராச்சியில் லியாகத் சர்க்காரிடமும் மௌண்ட்பேட்டன்—ஜெனரல் இஸ்மே—ஜெங்கின்ஸ் கும்பல் அரசியல் அதிகாரத்தை மாற்றிற்று. அதுவரை பஞ்சாப் கலவரமாக இருந்த நிகழ்ச்சி, மறுநாள் காலையில் "பாக்கிஸ்தான்—இந்திய யூனியன் சண்டையாக" பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் ராய்ட்டர் செய்தி ஸ்தாபனத்துக்கு இந்திய கிளையாகிய 'அசோஸியேட்டட் பிரஸ்' பஞ்சாபில் பிரிட்டிஷ் தளபதிகளின் தலைமையில் எல்லைப்படையினர் செய்த அட்டகாசங்களை அந்தந்த சர்க்கார்கள்—அன்றே பிறந்திருந்த சர்க்கார்கள்—செய்வதாக சித்தரிக்க முற்பட்டது. 15ம் தேதி தேசமெங்கும் குதூகலித்த இந்து-முஸ்லிம் ஜனங்களுக்கு எதுவும் விளங்கவில்லை. இந்திய யூனியனிலுள்ள முஸ்லிம்கள் தங்களுடைய பாக்கிஸ்தான் சர்க்காரை குழவிப்பருவத்திலேயே கழுத்தை நெரித்துக்கொல்ல இந்துக்கள் பெரிய யுத்தத்தைத் தொடுத்து விட்டனர் என்று நினைக்கும்படி செய்தது அ. பி. அதேபோல் பாக்கிஸ்தான் இந்திய யூனியனை அழிக்க பஞ்சாப் எல்லையில் படையெடுத்துவிட்டதாக இந்து ஜனங்களை நினைக்கும்படி செய்தது அதே அ. பி.

இந்த கொடூர செய்தியைத் தொடர்ந்து, ஆகஸ்ட் 17ம் தேதியன்று, மௌண்ட்பேட்டன் திட்டம் சிருஷ்டித்த, "நேரம் பார்த்து வெடிக்கும் குண்டை" (Time Bomb) ஏகாதிபத்யம் வீசியெறிந்தது. அதுதான் எல்லை நிர்ணயக் கமிஷனுக்கு தலைவனாக இருந்த பிரிட்டிஷ் அதிகாரி ராட்கிளிப், கமிஷனின் மற்ற உறுப்பினர்களுடைய அபிப்பிராயத்துக்கு நேர்மாறாக அளித்த தீர்ப்பு.

அதை லீகர்கள் அக்ரமம் என்றனர்; சீக்கியர்கள் அட்டூழியம் என்றனர்; இந்துமகாசபையினர் படுபாதகம் என்றனர். பிரிட்டிஷார் மட்டும் நிரம்ப நேர்மையான தீர்ப்பு என்றனர்.

அந்த தீர்ப்பைப் பார்த்தவுடன், எந்த அகாலிகள் பஞ்சாபை கூறுபோட வேண்டுமென்று முதலில் சொன்னார்களோ, அவர்களே அது, "சீக்கியர் ஒற்றுமையைச் சிதைத்துவிட்டதாகக்" கூச்சல் போட்டு, ஆயுத பலத்தால் நியாயமான எல்லையை ஏற்படுத்துவோம் என்று யுத்த கோஷத்தை எழுப்பினர்.

பிரிட்டிஷ் சர்க்காரிடம் செய்தி இலாகா அதிகாரியாக இருந்து ' சபாஷ்" பட்டம் வாங்கிய அல்டாப் ஹுசைனை ஆசிரியராகக் கொண்ட லீக் தினசரி "டான்', "அந்த தீர்ப்பை பாக்கிஸ்தான் சர்க்கார் ஒப்புக்கொண்ட போதிலும், முஸ்லிம்கள் எதிர்க்க வேண்டும்" என்று காரசாரமாக தலையங்கத்தில் தீட்டிற்று. ஏகாதிபத்ய குட்டையில் ஊறிய மட்டையான பெரோஸ் கான் நூனும், அவரைச் சேர்ந்த ஜமீன்தார்களும், உயிரைக் கொடுத்து நியாயமான எல்லையை ஏற்படுத்துவோம் என்று வீரம் பேசினர்.

இரண்டு புறமும் ஏகாதிபத்ய சேவையில் ஊறிய பிற்போக்குப் பிண்டங்கள் ஜனங்களுக்கு முன்னைவிட அதிகமாக ஆத்திர மூட்டி ஒருவரை யொருவர் முன்னைவிடப் பதினாயிரம் மடங்கு உக்கிரமாகத் தாக்கிக்கொள்ளும்படி செய்தனர்.

நேருஜி டில்லியில் அதிகாரத்தை வாங்கியவுடன், மறுநாளே பஞ்சாபுக்குப் பறந்தார். அதேபோல், பாக்கிஸ்தான் பிரதமர் லியாகத் அலிகானும் பறந்தார். தீயின் நடுவே, கொலைகாரர்களின் நடுவே இந்தியாவின் பிரதமர் நேரு நின்றார்; வேண்டுகோள் விடுத்தார்; பயனில்லை.

லியாகத்தும் அவரும் பேசினர். உறுதியாகக் கலகத்தை அடக்குவது என்று முடிவு செய்து 18-ம் தேதியன்று கூட்டு அறிக்கை வெளியிட்டனர். "எல்லா பகுதிகளும் குதூகலப்படும் போது, பாஞ்சாலத்தில் மட்டும் இந்த அட்டூழியம் என் ?" என்று கேட்டனர். "சமாதானத்தை ஸ்தாபித்தே தீருவோம்" என்று உறுதி கூறினர். அதிகாரிகளுக்கு கடுமையான தாக்கீது விட்டனர்.

ஆனால் எதற்கும் பயனில்லை. முஸ்லிம் நேஷனல் கார்டுகள் லியாகத் பேச்சை கேட்கவில்லை. ஏனெனில், முஸ்லிம்கள்

கிழக்கே படுகொலை செய்யப்படும்போது, லியாகத் இந்திய சர்க்கார்மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவில்லை என்று நூன் கோஷ்டியைச் சேர்ந்த ஜமீன்தார்கள் எல்லோரும் லியாகத்தைத் தாக்கினர்.

இந்தப்புறத்தில், இந்து-சீக்கியர் படுகொலை செய்யப்படும் போது நேரு சர்க்கார் பாக்கிஸ்தான்மீது கடுமையான நடவடிக்கை எடுக்காமலிருக்கிறது என்று ஆர். எஸ். எஸ். காரர்களும் அகாலிகளும் நேருஜியைத் தாக்கினர்.

இந்த நிலைமையில் பிரிட்டிஷ் தளபதியின்கீழ் எல்லைப்படையின் முஸ்லிம் ரெஜிமெண்ட், ராட்கிளிப் நிச்சயித்த எல்லையைத் தாண்டிவந்து கிராமங்களைத் தாக்கி ஆக்கிரமித்தது. உடனே, அ. பி., பாக்கிஸ்தான் படையெடுப்பென்று உலகமெங்கும் செய்திகளை அனுப்பிற்று.

நேரு டில்லிக்கும், லியாகத் கராச்சிக்கும் ஓடினுர்கள். அவசரமாக மந்திரி சபை கூட்டம் நடந்தது. உறுதியாக கலகக்காரர்களை அடக்குவதென்று நேருஜி கர்ஜித்தார். மீண்டும் பாஞ்சாலத்துக்கு உடனே புறப்பட்டார். கராச்சியில் பாக்கிஸ்தான் மந்திரிகள் நிலைமையைப் பார்த்து பயந்துவிட்டனர். மேற்கு பஞ்சாபில் நடப்பதைக் கண்டித்தால், நூன் கோஷ்டி முஸ்லிம்களின் ஆத்திரத்தைத் தங்கள்மீது திருப்பிவிட்டு விடுமென்று நினைத்தனர். அதோடு, அவர்கள் இடுகிற உத்திரவுகளை நிறைவேற்றுவதற்கு பாக்கிஸ்தான் சர்க்காரிலிருந்த அதிகாரிகளில் பெரும்பாலானோர் பிரிட்டிஷ்காரர்கள். அந்த அதிகாரிகள் எதுவும் செய்யக்கூடும். பலூச்சிஸ்தானில் அவர்களுடைய முயற்சியால், கலாட் நவாபின் ஆட்கள் குவெட்டாவுக்கு தீ வைத்து விட்டனர். சிறுபான்மையினர்மீது பழிவாங்கும் படலம் ஆரம்பித்துவிட்டது. இது போதாதென்று, எல்லைப்புறத்தில் சிறுபான்மையினருக்கு ஆறுதலளித்து வந்த டாக்டர் கான் சாஹிபுடைய மந்திரி சபையை பிரிட்டிஷ் கவர்னர் கன்னிங்ஹாம் எதேச்சாதிகாரமாக டிஸ்மிஸ் செய்தான். அதைத் தொடர்ந்து அங்குள்ள பீர்களும், ஜமீன்தார்களும், மலைஜாதியினரின் தலைவர்களும் கிழக்குப் பஞ்சாபுக்காகப் பழிவாங்க வேண்டுமென்று ஆத்திரமூட்ட ஆரம்பித்து விட்டனர். இது அங்குள்ள சிறுபான்மையினருக்கு கிலியை உண்டுபண்ணி விட்டது. இந்த நிலையையில், அந்த அயோக்யர்கள் தங்கள்மீது முஸ்லிம்களின் ஆத்திரத்தைத் திருப்பாமலிருக்கும் பொருட்டு,

பாக்கிஸ்தான் சர்க்கார் மேற்கு பஞ்சாப் நிகழ்ச்சிகளைப்பற்றி குறிப்பிடாமல் கிழக்குப் பஞ்சாபை பற்றி மட்டும் அறிக்கைகளில் குறிப்பிட்டது.

இந்தப் போக்கை இந்திய யூனியனிலுள்ள பிற்போக்காளர்கள் பாக்கிஸ்தான்மீது ஆத்திரத்தைக் கிளப்ப உபயோகப்படுத்தினர். இரண்டு புறங்களிலும் "நீ உண்மையைச் சொல்லவில்லை! நீ பொய் சொல்கிறாய்!" என்று அறிக்கைகளும், எதிர் அறிக்கைகளும் வர ஆரம்பித்தன.

இந்த நிலைமையில் பாட்டியாலா மகாராஜா பத்திரிகைகள் மூலம் தன்னுடைய சகோதர ராஜாக்களுக்குக் கீழ்க்கண்டவாறு சொன்னார்: "வெகு நாட்களாக எதிர்பார்த்திருந்த சுதந்திரம் நமக்குக் கிடைத்துவிட்டது. முன்னேறிச் செல்லும் சமஸ்தானங்களைத் தடுத்து நிறுத்தும் சக்தி இப்போது எதுவும் இல்லை. எதிர்காலத்தை நமக்கேற்றபடி உருவாக்க நாம் எல்லோரும் ஒன்றுபட வேண்டும்." (20-8-47)

இவ்விதம் அவர் பேசியபோது, அவர் ஆகஸ்ட் 15-ம் தேதியைத்தான் குறிப்பிடுகிறார் என்று பலர் நினைத்தனர். ஆனால், ராஜபுதன சமஸ்தானாதிபதிகள் கோஷித்துவந்த "டில்லி பக்டோ"! (டில்லியைப் பிடியுங்கள்!) என்ற ஸ்லோகத்தை நிறைவேற்ற அவர் பச்சை விளக்குக் காட்டினார் என்பது யாருக்கும் தெரியாது.

## டில்லியைத் தாக்க சதி

நேருஜி 24-ம் தேதி பஞ்சாபுக்குச் சென்று விட்டார். கலவரம் அடங்கும் வரையில் அங்கிருந்து கிளம்பபோவதில்லை என்று சொன்னார்.

ஆனால், 10½ லக்ஷம் ஜனங்கள் வசிக்கிற டில்லிக்கு—தங்குவதற்கு எவ்வித இடமும் இல்லாத டில்லிக்கு—எல்லை படையின் பிரிட்டிஷ் தளபதிகள் 2½ லக்ஷம் அகதிகளைக் கொண்டு வந்தனர். அந்த 2½ லக்ஷம் பேருக்கு சோறுபோட அதிகமாக உணவுப் பொருளை டில்லிக்குக் கொண்டுவந்து ஸ்டாக் செய்ய வேண்டுமென்று அவர்கள் உணவு இலாகாவுக்கு அறிவிக்கவில்லை. உணவு நெருக்கடி வரும் என்று எச்சரிக்கை செய்யவுமில்லை. ஆயிரம் பதினாயிரக் கணக்கில் வீதிகளில் துயரக் கதைகளைச் சொல்லிச் செல்லும்படி விடப்பட்ட அகதிகளால், அமைதிக்கு பங்கமேற்படும் என்பது தெரிந்திருந்தும், டில்லியின் பாதுகாப்புக்கு பொறுப்பாளி

களான இராணுவ தளபதிகள் எவ்வித நடவடிக்கையும் முன்னெச் சரிக்கையாக எடுக்கவில்லை. ஆர். எஸ். எஸ். கூட்டத்தினரும், அகாலிகளும் ரயில் வண்டிகளைத் தாக்குகின்றனர் என்பது தெரிந்திருந்தும், தண்டவாளங்களைப் பாதுகாக்க அந்த தளபதிகளும், பிரதம ரயில்வே கமிஷனர் எமர்ஸனும் எதுவும் செய்யவில்லை. அகதிகள்கூட கிழக்கு பஞ்சாபிலிருந்து விசேஷ ராணுவப் பயிற்சி பெற்ற அகாலிகளும், ஆர். எஸ். எஸ். காரர்களும் வந்திருக்கின்றனர் என்புதை டிலலி போலீஸ் சர்க்காருக்குக் கூறி எச்சரிக்க வில்லை. கேந்திரமான உத்தியோகங்களில் ஆர். எஸ். எஸ். காரர்களையும, அகாலிகளையும் பிரிட்டிஷ் கமிஷனர் நியமித்தான் என்பதும் நேருஜிக்கு தெரியாது.

டில்லியில் பிரிட்டிஷ் அதிகாரிகள் அவ்விதம் செய்தபோது, பாட்டியாலா மகாராஜாவைத் தலைவனாகக் கொண்டு ஒரு சீக்கிய ராஜ்யத்தை ஸ்தாபிக்க வேண்டுமென்று அகாலிகள் ஜனங்களிடையே கோஷத்தைக் கிளப்பினர்.

ஹிந்து மகாசபை ஆகஸ்ட் 31-ம் தேதியை துக்க தினமாகக் கொண்டாடும்படி அறைகூவல் விடுத்துவிட்டு, "மத்திய சர்க்காரில் நேரு, ஆஸாத், கித்வாய் ஒழிக! ஒழிப்போம்!" என்ற கோஷத்தைப் பரப்பிற்று.

டில்லியைச் சுற்றியிருக்கும் ஆள்வார், பரத்பூர், ஜெயப்பூர், ஜிந்த் முதலிய சமஸ்தானங்களின் ராஜாக்கள், மியோ என்ற முஸ்லிம் விவசாயிகளை ஆயிரக்கணக்கில் கொன்றுவிட்டு, "இந்துகளுக்காக நாங்களே போராடுகிறோம்!" என்று தம்பட்டமடித்தனர். "முஸ்லிம் மிலேச்சர்களை அடியோடு ஒழித்து ராஜபுதனத்தை பரிசுத்தப்படுத்துவோம்! அதன் பிறகு டில்லிக்கு படையெடுத்துச் சென்று க்ஷத்திரியர்களின் கொடியை உயர்த்துவோம்!" என்று கோஷித்தனர்.

இவ்விதம் நாலாபுறங்களிலும் ராஜாக்கள் சுற்றி வளைக்க, நடுவில் ஐந்தாம் படை சுறுசுறுப்பாக வேலை செய்ய, டில்லி குமுற ஆரம்பித்துவிட்டது.

## மௌண்ட்பேட்டன் குண்டுகள் வெடித்தன

இந்த நிலைமையில் "சூழ்ச்சிக் கும்பல் பாக்கிஸ்தானுக்கு கூடாரம் தூக்கட்டும்; பிரிவினை கோஷ்டிக்கு நவ இந்தியாவில் இடமில்லை" என்று 28-8-47ல் சர்தார் வல்லபாய் பட்டேல் அரசியல்

நிர்ணயசபையில் கர்ஜித்தார். அந்த கர்ஜனையில் நேரம்பார்த்து வெடிக்க மௌண்ட்பேட்டன் வைத்த வெடி குண்டுகளில் ஒன்று வெடித்தது. அதுதான் இரண்டுபுறங்களிலுமுள்ள மைனாரிட்டி பிரச்னை. இந்திய யூனியனிலுள்ள முஸ்லிம்கள் இந்தியர்களா, அல்லது பாக்கிஸ்தான் பிரஜைகளா? பாக்கிஸ்தான் பிரஜைகள் என்றால், அவர்கள் ஐந்தாம் படையினர். ஐந்தாம் படையினருக்கு இடமில்லை! இந்தியர்கள் என்றால், மற்றவர்களைவிட விசேஷ சலுகை எதுவுமில்லை!

பிரிவினைக்குப் பிறகு என்ன நேர்ந்திருக்கிறது என்று யோசிக்கக்கூட நேரம் கிடைக்கவில்லை; இரண்டு பகுதிகளுக்கும் சுதந்திரம் கிடைத்ததைப் பார்த்து சந்தோஷப்பட்டு முடிவதற்குள் பஞ்சாப் சூட்டோடு சூடாக அது வெடித்துவிட்டது! இந்துமகாசபையினர் முஸ்லிம் ஐந்தாம் படையை ஒழிக்கவேண்டுமென்று பிரசாரம் தொடங்கிவிட்டனர்.

அதைத் தொடர்ந்து 6-9-47ல் மௌண்ட்பேட்டனின் இன்னொரு குண்டு வெடித்தது. பணக்கார அகதிகளுடன் பாங்கு பணம் பாக்கிஸ்தானை விட்டு வெளியேறுவதைப் பார்த்த சர்க்கார், அதை தடை செய்தது. அது, பாக்கிஸ்தானுடன் செய்துகொண்ட செல்வ உடன்பாட்டுக்கு விரோதமானதென்றும், நாங்களும் அவ்விதமே தடைசெய்வோம் என்றும் ஷண்முகம் செட்டியாரின் டிபார்ட்மெண்ட் அறிவித்தது.

அதைத் தொடர்ந்து, மௌண்ட்பேட்டனின் இன்னொரு வெடிகுண்டு அதேதினத்தில் வெடித்தது. ராஜாக்கள் தங்கள் இஷ்டப்படி எந்த சர்க்காருடன் வேண்டுமானாலும் சேரலாம் என்பதே அது. இதன்படி பாக்கிஸ்தானுடன் சேருவதற்கு எவ்வித நியாயமான காரணமும் இல்லாதிருக்கும்போது, ஜூனாகத் நவாப் பாக்கிஸ்தானுடன் சேர்ந்தான். அங்கிருந்த ஜனங்கள்மீது அடக்குமுறையை அவிழ்த்துவிட்டான்.

அதே தினத்தில் சகல பிற்போக்கு சக்திகளும் சேர்ந்து டில்லியில் முஸ்லிம்கள்மீது தாக்குதலைத் தொடுத்தனர். டில்லிக்கு சுற்றுப்புறமுள்ள ரயில் போக்குவரத்து துண்டிக்கப்பட்டது. எழு நாட்கள் கலவரம் நிற்கவில்லை. முஸ்லிம்கள் கொல்லப்பட்டனர்; கடைகள் சூறையாடப்பட்டன; தீ வைக்கப்பட்டன. நேருஜி பஞ்சாபிலிருந்து ஓடிவந்தார். காந்திஜி கல்கத்தாவிலிருந்து வந்

தார். கலகத்தை நிறுத்த, முஸ்லிம் மைனாரிட்டியைக் காக்க, உயிரைப் பணயம் வைத்தனர்.

அந்த சமயத்தில், 9ம் தேதியன்று, இந்து மகாசபையின் "இந்து அவுட்லுக்" என்ற பத்திரிகை, ஆர். எஸ். எஸ். படையினருக்குக் கீழ்க்கண்ட வேலைகளைக் கொடுத்தது:

1. வெறும் பதர்களைக் கொண்ட இந்த சர்க்காரைக் கீழே தள்ளு; வலுவான இந்துக்களைக்கொண்ட சர்க்காரை ஏற்படுத்து!

2. இந்திய யூனியன் ஒரு இந்து அரசாங்கம் என்று பிரகடனம் செய்.

3. பாக்கிஸ்தானுடன் யுத்தம் தொடுப்பதற்கு தேசத்தை ஆயத்தப்படுத்து.

4. கட்டாய இராணுவ சேவையை சட்டமாக்கி, இந்து இளைஞர்கள் எல்லோரையும் திரட்டுக!

5. முஸ்லிம்கள் எல்லோரையும் ஐந்தாம் படையினராக நடத்துக!

6. இஸ்லாம் என்று சொல்வதையே சட்டவிரோதமாக்குக!

இந்த ஸ்லோகங்களை நடைமுறையில் நிறைவேற்ற முஸ்லிம்களைக் கொன்று குவிக்கும்போது, ஆர். எஸ். எஸ். கொலைகாரர்களும், அகாலிகளும் "ஆங்ஸானுக்கு ஏற்பட்ட கதியே நேருவுக்கும் ஏற்படவேண்டும்" என்றனர்.

நேருவுடன் அதிகாரிகள் ஒத்துழைக்கவில்லை; இராணுவம் ஒத்துழைக்கவில்லை. இதற்குமாறாக, அவர்கள் எல்லோரும் மைனாரிட்டியினரைக் கொல்லுவதிலும், சூறையாடுவதிலும் பங்கெடுத்துக்கொண்டனர்.

நேருஜி, காந்திஜி ஆகியவர்களின் துணிச்சலான முயற்சியும் வகுப்பு வெறியால் பாதிக்கப்படாத சென்னை பட்டாளத்தின் துண்டுகளுமே அமைதியை நிலைநாட்டின.

என்னதான் அமைதியை நிலைநாட்டியபோதிலும், டில்லி கலகம் உலக நாடுகளில் இந்தியாவுக்குத் கெட்ட பெயரை உண்டு பண்ணிவிட்டது. ஆங்கிலோ - அமெரிக்க பிற்போக்காளருக்கு நேருஜியைத் தாக்குவதற்கு சரியான ஆயுதமாக கையில் கிடைத்து விட்டது.

## எதைக் காட்டுகிறது?

டில்லி நிகழ்ச்சி எதைக் காட்டுகிறது?

எந்த ஜனங்களை நம்பி நேரு சர்க்கார் ஆட்சியிலிருக்கிறதோ, அதே ஜனங்கள் நேரு சர்க்காரின் விரோதிகளின் கையில் சிக்கி விட்டனர்.

நேரு சர்க்கார் ஜனங்களின் வெற்றியால் ஏற்பட்ட சர்க்கார். அதைக் காப்பாற்ற ஜனங்கள் ஆயுதமெடுத்து போராடுவதற்கு பதில், அதைத் தாக்கியவர்களின் வலையில் மாட்டிக்கொண்டுவிட்டனர்.

இதற்குக் காரணம் என்ன?

காங்கிரஸ்காரர்கள் கடந்த சில காலமாக ஜனங்களை மறந்து சுயநல வேலைகளில் ஈடுபட்டதேயாகும். இதைப்பற்றி 3-10-47ல் நேருஜி கீழ்க்கண்டவாறு கூறினர்:

> "காங்கிரஸ்காரர்கள் எல்லோரையும் எச்சரிக்கிறேன்! உதவாக்கரை சில்லரை விவகாரங்களில் சண்டை சச்சரவிட்டுக்கொண்டு, இன்றைக்குக் காங்கிரஸ்காரர்கள் தங்களுடைய சக்தியை வீண் விரயம் செய்கின்றனர். உருப்படியான ஆக்க வேலை எதையும் அவர்கள் அதிகமாகச் செய்யவில்லை. பழைய காலத்தில் செய்த தியாகங்களே இதுவரை காங்கிரஸ்மீது ஜனங்களுக்கு இருந்த நம்பிக்கைக்குக் காரணம். ஜனங்கள் எதையும் நீண்ட காலத்துக்கு நினைவில் வைத்திருக்கமாட்டார்கள். ஆகவே, பழைய தியாகத்தால் கிடைத்த நற்பெயர் நீண்ட காலத்துக்கு நீடிக்காது. அப்போதுக்கப்போது புதிதுபுதிதாக ஜனங்களுக்கு சேவை செய்யவேண்டும்".

ஆகவே, எதை காங்கிரஸ்காரர்கள் செய்யத்தவறினர்களோ, அதை காங்கிரஸின் ஒப்புயர்வற்ற தலைவர்கள், சிதைந்த டில்லியில் தாங்களே செய்ய முற்பட்டனர். காந்திஜியும், நேருஜியும் தெருத் தெருவாகச்சென்று ஜனங்களைக் காங்கிரஸ் விரோதிகளின் கையிலிருந்து மீட்பதற்கு வேலை செய்தனர். இந்த வேலையில் காங்கிரஸின் பரம்பரையை என்றென்றைக்கும் நினைவில் வைத்து சதாசர்வகாலமும் ஜனங்களுக்கு சேவை செய்துவரும் கம்யூனிஸ்ட்கள், மற்ற காங்கிரஸ்காரர்களுடன் இரண்டறக் கலந்தனர்.

காங்கிரஸின் பரம்பரையையும், தேசிய இயக்கத்தின் லக்ஷியங்களையும், ஜனங்களின் வெற்றிகளையும், அராஜகத்துக்குத்தூண்டியவர்களின் தேச துரோக பரம்பரையையும் அவர்கள் ஜனங்களுக்கு நினைவூட்டினர். தேசிய சர்க்காரை ஜனங்கள் பாதுகாக்க வேண்டுமே யொழிய, இராணுவம் அல்ல என்றனர். இராணுவத்தைமட்டும் நம்பி தேசீய சர்க்கார் வாழமுடியா தென்றனர். விரட்டியடிக்கப்பட்ட முஸ்லிம் சகோதரர்களை மீண்டும் அழைத்து பாதுகாப்பு கொடுக்கவேண்டு மென்றனர். இந்த அராஜகத்தினல் ஆகஸ்ட் பதினைந்தில் அவர்கள் சாதித்த வெற்றி எவ்வளவு தூரம் நஷ்டமாகிவிட்ட தென்பதை எடுத்துக் காட்டினர். "இந்து ஆட்சி" என்பது பாஸிஸ்ட் ஆட்சி யென்று எடுத்துச் சொன்னுர்கள். தொழிலாளிகள் வலுவான தொழிற் சங்கங்களைக் கட்ட வேண்டுமென்று நேருஜி சொன்னுர்.

காங்கிரஸின் விரோதிகளிடமிருந்து ஜனங்களைக் காப்பாற்ற சகல காங்கிரஸ்காரர்களும் சில்லரை தகராறுகளைவிட்டு உழைக்க வேண்டுமென்று நேருஜி வேண்டுகோள் விடுத்தார்.

## மற்ருெரு போக்கு

இவ்விதம் இந்தியாவின் பிரதமரும், தேசிய இயக்கத்தின் தந்தையும் காங்கிரஸ்காரர்களை ஆக்கவேலையில் ஈடுபடுத்தி, ஜனங்களைக் காப்பாற்றவும், தேசிய இயக்கத்தைக் காப்பாற்றவும் பெரு முயற்சிசெய்து கொண்டிருந்தபோது, இந்தியாவில் மிகப் பெரிய பணக்காரர்களில் ஒருவரான **பிர்லாவுடைய "ஹிந்துஸ்தான் டைம்ஸ்"** என்ற ஆங்கில தினசரியும், அவருடைய ஹிந்தி தினசரிகளும் ஜனங்களுக்கு வேறு விஷயங்களைக் கூறின.

● பாக்கிஸ்தான்மீது கடுமையாக நடவடிக்கை எடுக்கவில்லை என்று நேருஜியைத் தாக்கின.

● கலவரம் அடங்காமல் நீடித்தால், அது இரண்டு சர்க்கார்களுக்கிடையில் யுத்தம் ஏற்படுவதிலேயே கொண்டுபோய்விடும் என்றும், யுத்தத்தால் எப்படி நம் சுதந்திரம் அழியுமென்றும் மகாத்மா காந்தி எச்சரிக்கை செய்ததை, பாக்கிஸ்தான்மீது காந்திஜி யுத்தப் பிரகடனம் செய்துவிட்டதாக "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" தலைகீழாகத் திரித்தது; எங்கும் பீதியை உண்டுபண்ணிற்று. அ. பி. அதை உலகமெங்கும் பரப்பிற்று. மறுநாளே காந்திஜி அதை மறுத்தார்.

● பாகிஸ்தான்மீது யுத்தம் தொடுக்க தேசத்தைத் தயார்ப் படுத்த வேண்டுமென்றும் எழுதிற்று.

இதே கோஷங்கள்தான் இந்துமகா சபையினருடையவை என்பது எல்லோருக்கும் தெரியும்.

இந்தியாவின் உதவிப் பிரதமராக இருக்கும் சர்தார் வல்லபாய் பட்டேல் செய்த பிரசங்கங்கள், அந்தப் போக்கைக் கண்டிப்ப தற்குப் பதில், ஊக்கமூட்டக்கூடியதாக இருந்தது.

● அவருடைய பிரசங்கங்கள் சகலருக்கும் பொதுவான ஜன நாயக உணர்ச்சியையும், மனசாக்ஷியையும், தேசீய பரம்பரையை பற்றிய நினைவுகளையும் தூண்டுவதற்குப் பதில், இந்து வகுப்புவாதி களின் உணர்ச்சிகளை வெளியிட்டன.

● தன்னிடம் மட்டும் முழு அதிகாரத்தையும் கொடுத்து விட்டால், இந்திய யூனியனின் வடக்கு பிரதேசங்களிலிருந்து ஒவ் வொரு முஸ்லிமையும் வெளியேற்றிவிடுவார் என்று அவர் தன் பிரசங்கங்களில் காட்டிக் கொண்டார்.

● அகதிகளாய் நிர்க்கதியாய் விடப்பட்ட இரண்டரை லக்ஷம் டில்லி முஸ்லிம்களுக்கு அங்கேயே தங்க போதிய பாதுகாப்பு அளிப்பதற்குப் பதில், எல்லோரையும் வெளியேற்றிவிடவேண்டும் என்று அவர் கூறியதாக சொல்லப்படுகிறது.

● கலவரத் தீயை மூட்டிய ராஜாக்கள், வகுப்புவாதிகள், ஆர். எஸ். எஸ். போன்ற தேசீய விரோத ஸ்தாபனங்களின் விஷ யத்தில் கடுமையாக நடந்துகொண்டு, வகுப்புவாதத்தை ஒழித்து தேசீயத்தை நிலைநிறுத்துவதற்கு பதில், அவர்களைத் திருப்திப்படுத் தக்கூடிய ஒரு கொள்கையை சர்க்கார் கையாளவேண்டும் என்று அவர் சொல்வதாகக் கூறப்படுகிறது.

சர்தார் பட்டேலுடைய அபிப்பிராயம் மட்டுமல்ல அது. மந் திரி சபையில் இந்து மகாசபையின் பிரதிநிதி சியாம பிரஸாத் முகர்ஜி, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் சிபார்சின் பேரில் சேர்த் துக்கொள்ளப்பட்ட பல்தேவ் சிங், பணமூட்டைகளின் நேரடி யான பிரதிநிதிகள் ஸி. எச். பாபா, ஆர். கே. ஷண்முகம் செட்டி ஆகியவர்களும் இருக்கின்றனர். இவர்களுக்கு நேருஜியின் கொள்கை துளிகூட பிடிக்கவில்லை.

மந்திரி சபையில் இவ்விதம் பிற்போக்கு சக்திகளின் பலம் அதிகமாக இருப்பதால், நேருஜிக்கு தன்னுடைய ஜனநாயக கொள்

கையை நிறைவேற்றுவதில் ஒவ்வொரு கட்டத்திலும் கஷ்டம் ஏற்படுகிறது. இதைத்தான் "நண்பர்களும் கஷ்டம் விளைவிக்கிறார்கள்" என்றார் நேரு.

## நேருவா, சர்தார் பட்டேலா ?

சர்தார் பட்டேலுடைய கொள்கை கடைப்பிடிக்கப்பட்டால் அது நேரடியாக இந்து மகாசபையினர் கேட்கிற 'இந்து ஆட்சி' ஏற்படுவதில்தான் கொண்டுபோய் விடும்.

"ஹிந்து ஆட்சி" என்றால் என்ன ?

"நான் முஸ்லிம்களுடைய விரோதி. ஹிந்து தர்மத்துக்காக போராடுபவன்" என்று எவனெவனெல்லாம் சொல்கிறானோ, அவனெல்லாம் அதிகாரத்துக்கு வருவான். ராஜாக்கள், ஜமீன்தார்கள், மிராசுதார்கள், பிர்லாக்கள், பதுக்கல்காரர்கள், தேசத்துரோகிகள், ஊர்க்காலாடிகள் முதலியவர்கள் அதிகாரத்துக்கு வருவதற்கு உபயோகப்படுத்தும் ஒரு முகமூடியே "ஹிந்து" என்ற பேச்சு.

ஜனங்களுக்கு சோறு கிடைக்க, போதிய கூலி கிடைக்க, வேலை கிடைக்க, வாழ்க்கைத் தரம் உயர, ஜனங்களின் போராட்டங்களை நடத்துகிற சகல தேசபக்தர்களும், "ஹிந்து தர்மத்துக்கு விரோதிகள்" என்று சொல்லி பழிவாங்கப்படுவர். வர்க்க ஸ்தாபனங்கள் அழியும், ஜனநாயகம் அழியும்.

உலக ஜனங்கள் அவ்வளவு பேரும் வெறுத்து சென்ற யுத்தத்தில் முறியடிக்கப்பட்ட பாஸிஸ்ட் ஆட்சியே, "ஹிந்து" என்ற முகமூடியில் ஏற்படும்.

பாஸிஸ்ட் ஆட்சி ஏற்பட்டால், சோறு கேட்கும் ஜனங்களுக்கு "முஸ்லிம்களின் இரத்தத்தைக் குடி !" என்ற பதிலே கிடைக்கும். பாக்கிஸ்தானுடன் யுத்தத்துக்கு சென்று மடியுங்கள் என்ற பேச்சே காதில் விழும்.

ஹிந்து ஆட்சி என்றால் யுத்தம் ; நாசம் ; சிதைவு ; சீரழிவு.

இதுதான் இன்றைக்கு அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள் தங்கள் ஆதிக்கத்தை உலகில் ஏற்படுத்த ஒவ்வொரு நாட்டிலும் விரும்புகிற நிலைமை. கிரீஸில் ஜனங்களை நசுக்கி, பாஸிஸ்ட் ஆட்சியை ஏற்படுத்தி, தேசபக்தர்களை எதிர்த்து அமெரிக்கர்கள் சண்டைபோட்டு வருகின்றனர். சீனாவில் அமைதியின்றி உள்நாட்டு யுத்தம் நடப்பதற்கு அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளே காரணம்.

அமெரிக்க ஏகாதிபத்யவாதிகளின் சொல்படி நடப்பதே இன்றைக்கு பிரிட்டன் கையாளும் அந்நியநாட்டுக் கொள்கை. பிரிட்டன் இன்றைக்கு தன்னால் இனிமேல் படைகளுக்கு சோறு போட்டு, தேசபக்தர்களை அடக்கி வைத்திருக்க முடியாது என்று சொல்கிற ஒவ்வொரு இடத்துக்கும் அமெரிக்கர் தங்களுடைய படைகளை அனுப்புகின்றனர். கிரீஸிலிருந்து பிரிட்டிஷ் படை வாபஸ் ஆனதும், அங்கு அமெரிக்கப் படை சென்றது. பாலஸ்தீனத்தை விட்டு பிரிட்டிஷ் படை வெளியேறுவதாகச் சொன்னவுடன், அமெரிக்கப் படை அங்கு செல்கிறது. இந்தோனேஷ்யாவில் டச்சுப் படை சண்டை போடுவதற்கு அமெரிக்க முதலாளிகளின் டாலரும், ஆயுதங்களுமே காரணம். பர்மாவில் ஆங்ஸானைக் கொன்று, நாட்டில் அராஜகத்தை சிருஷ்டிக்கப் பார்க்கிறார்கள் பிரிட்டிஷ் ஏகாதிபத்யவாதிகள். அராஜகத்தை சுட்டிக் காட்டி, அமைதியை ஏற்படுத்தப் போவதாகச் சொல்லி, தேசபக்தர்களை அடக்க முயற்சிக்கின்றனர். அவர்களுடைய கொள்கை ஒவ்வொரு நாட்டிலும் உள்நாட்டு யுத்தத்தைத் தூண்டுவது.

ஆகவே, சோறு கேட்கும் ஜனங்களுக்கு பாக்கிஸ்தானுடன் யுத்தத்தை-தரக்கூடிய "ஹிந்து ஆட்சி"யையே இன்று ஆங்கிலோ-அமெரிக்க ஏகாதிபத்யவாதிகள் விரும்புகின்றனர். இந்த ஆட்சிக்காக, பிர்லாக்கள் முயற்சி செய்வதுபோல, அவர்களும் திரைமறைவில் பகீரத முயற்சி செய்கின்றனர்

ஆகவே, சர்தார் பட்டேல் கொள்கை இந்திய மக்களுக்கு சோறும், உடையும், வேலையும் தருவதற்கு பதில், யுத்தத்தையும், நாசத்தையும், அந்நிய அடிமைத்தனத்தையுமே தரும்.

காந்திஜி சர்தார் பட்டேலின் கொள்கையை ஆதரிக்கவில்லை. காங்கிரஸ் காரியக் கமிட்டியும் அவருடைய கொள்கையை ஏற்றுக் கொள்ளவில்லை. சோஷியலிஸ்ட்களும், கம்யூனிஸ்ட்களும் அவருடைய கொள்கையை எதிர்க்கின்றனர்.

## அடுத்தபடி என்ன ?

இந்திய தேசபக்தர்களுக்கு இது ஒரு பெரிய சோதனை காலம் ஆங்கிலோ—அமெரிக்க ஏகாதிபத்யங்களின் கைக்கூலிகள் எல்லோரும், பொதுஜனங்களின் விரோதிகள் எல்லோரும், பாக்கிஸ்தானிலும், இந்திய யூனியனிலும் பிற்போக்கு அரசாங்கங்களை ஏற்படுத்துவதிலும், யுத்தத்தை உண்டுபண்ணுவதிலும் ஒன்றுபட்டிருக்கின்றனர்.

பாக்கிஸ்தானில் முஸ்லிம் லீக் ஸ்தாபனத்திலும், சர்க்காரிலும் பிற்போக்காளர்களின் ஆதிக்கமே ஓங்கி யிருக்கிறது. அங்கிருந்துகொண்டு இந்திய யூனியன் மக்களுக்கு ஆத்திர மூட்டுவதே அவர்களுக்கு எதிர்ப் புரட்சிக்காரர்கள் கொடுத்திருக்கும் வேலை. ஸர் ஜபருல்லா கான், ஸர் பெரோஸ்கான் நூன், ஜூனாகத் நவாபு, மன்கி ஷரீபு பீர், கலாட் நவாப், மற்ற ஜமீன்தார்கள், மேலஜாதி தலைவர்கள் அந்த வேலையையே செய்கின்றனர். ஸர் ஜாபருல்லா ஐக்கிய தேச சபைக்கு இந்திய பிரச்னையை எடுத்துச் சென்றதற்குக் காரணம், நேரு சர்க்காருக்குக் கெட்ட பெயரை உண்டு பண்ணவும், இந்திய யூனியன் மக்களுக்கு ஆத்திரத்தை ஊட்டவும், இங்குள்ள பிற்போக்காளர்கள் பலம் ஓங்கவும், ஆங்கிலோ--அமெரிக்கர் தலையீட்டுக்கு அடிகோலவுமே யாகும். இதை உணர்ந்ததனுல் தான், லீகும் பாக்கிஸ்தான் சர்க்காரும் என்ன செய்கின்றன என்பதை பொருட்படுத்தாமல், நாம் நம்முடைய விருப்பப்படி ஜன நாயக சர்க்காரை அமைக்க, நம் கொள்கையை வகுக்க வேண்டுமென்று காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானம் செய்தது.

இந்த நிலைமையில் நாம் எதைை எதிர்பார்க்க வேண்டும்?

● மௌண்ட்பேட்டன் நேரம் பார்த்து வெடிப்பதற்கு வைத்த குண்டுகள் பல இருக்கின்றன. இரண்டு சர்க்கார்களுக்கும் பொதுவான விவகாரங்கள் ஒவ்வொன்றையும் தீர்க்க முயற்சிக்கும் போதெல்லாம், அவை வெடிக்கும்; இரண்டு சர்க்கார்களுக் கிடையேயும் சண்டையை மூட்டும்.

● பாக்கிஸ்தானிலுள்ள பிற்போக்காளர்கள் முன்னைவிட ஆத்திர மூட்டும்படி பேசுவார்கள்.

● இங்குள்ள பிற்போக்காளர்கள் அதைச் சுட்டிக்காட்டி, ஹிந்து ஆட்சி வேண்டுமென்ற கோஷத்தை பரப்புவார்கள்.

● லக்ஷக்கணக்கில் ஓடி வந்திருக்கும் அகதிகளை இந்த காரியத்தில் பயன்படுத்துவர். ஏற்கனவே, ராஜபுதனம், கத்தியவார், மத்திய மாகாண சமஸ்தானங்களிலும், ஐக்கிய மாகாணத்திலும் கலவரத்தைப் பரப்ப அகதிகளை மும்முரமாகப் பயன்படுத்த வேலை செய்கின்றனர். பம்பாயிலும், தென் இந்தியாவிலும் கலவரத்தைப் பரப்ப தயங்க மாட்டார்கள். ஐக்கிய மாகாணத்திலுள்ள முஸ்லிம்களை வெளியேற்றி, அவர்களுடைய நிலத்தை அகதிகளுக்குக் கொடுக்க வேண்டுமென்று தாரா சிங் கூறியிருப்பது, அகதி

களுக்கு சில ஆசையை உண்டுபண்ணி, கலகத்தைப் பரப்பத் தூண்டுவதே தவிர வேறு எதுவுமல்ல.

● ஆர். எஸ். எஸ்ஸும், ஊர்க் காலாடிகளும் அவர்களுடைய படையினர். அவர்கள் தென்னாட்டிலும் நன்கு இராணுவப் பயிற்சி பெற்று வருகின்றனர். கலகத்தை சுலபமாக மூட்டிவிடுவார்கள். அவர்களுக்கு ஊரிலுள்ள பணமூட்டைகள் முழு உதவி செய்யும்.

இந்த நிலைமையில், சகல ஜனங்களும் எதிர்ப்புரட்சியைத் தடுத்து நிறுத்தியாக வேண்டும்; முறியடிக்க வேண்டும். பிரிட்டிஷ் சாம்ராஜ்ஜியத்தைவிட்டு விரைவில் நம் நாட்டை வெளியேற்றியாக வேண்டும்.

இதில் நேருஜியும், அவருடைய கொள்கையை ஆதரிப்பவர்களின் அரசாங்கமுமே ஜனங்களுக்கு உதவும்.

**நேருஜியின் கொள்கையை ஒப்புக்கொள்ளாதவர்கள், சர்க்காரைவிட்டு வெளியேற வேண்டும்.**

நேருஜியின் சர்க்கார் ஜனங்களின் வெற்றியால் ஏற்பட்டது. நேருஜியின் சர்க்காருக்கு ஏற்பட்டிருக்கும் ஆபத்து ஜனங்களின் பலஹீனத்தினால் வந்தது.

அதாவது, ஜனங்கள் ஏகாதிபத்தியத்தை முறியடித்தனர். பல ராஜாக்களை இந்திய யூனியனில் சேரும்படி செய்தனர். ஜமீன்தாரி ஒழிப்பு, பதுக்கல் ஒழிப்புபோன்ற காரியங்களை மந்திரி சபைகள் கைக்கொள்ளும்படி செய்தனர். ஜனங்கள் பலம் முன்னைவிட அதிகமாக பெருகியிருக்கிறது.

இந்த அளவுக்கு ஜனங்களின் விரோதிகள் பலமும் பெருகியிருக்கிறது. ஜனங்களின் விரோதிகள் அ. பி., யு. பி., ராய்ட்டர் போன்ற செய்தி ஸ்தாபனங்களையும், பெரிய பத்திரிகை சங்கிலித் தொடர்களையும் தங்கள் கையில் வைத்திருக்கின்றனர். காந்திஜியின் பேச்சையே திரித்து பொய்யைப் பரப்பும் கேந்திரம் அவர்களுடைய கையில் இருக்கிறது. அதோடு, அவர்களிடம் ஏராளமாக பணம் இருக்கிறது. இது போதாதென்று, அவர்களுக்கு உதவக்கூடிய வகையில், மௌண்ட்பேட்டன் வைத்த வெடிகுண்டுகள் நேரம் பார்த்து வெடித்து பாக்கிஸ்தானுடன் தகராறை உண்டுபண்டும். அவர்களுடைய ஐந்தாம்படை இந்திய சர்க்கார் மந்திரி சபை உள்பட சகல கேந்திரங்களிலும் உட்கார்ந்திருக்கின்றனர்.

ஆகவே, அந்த எதிரிகளை ஒரு காந்தியாலோ, ஒரு நேருவாலோ, சில கம்யூனிஸ்ட்களாலோ முறியடித்துவிட முடியாது.

லக்ஷக்கணக்கில் கடற்படையினரைக் காப்பாற்ற திரண்டதுபோல இ. தே. ரா. வீரர்களைக் காப்பாற்ற திரண்டதுபோல, சுதந்திர தினத்தன்று கோடிக்கணக்கில் "நேருஜிக்கு ஜே!" என்று திரண்டதுபோல, ஜனங்கள் எல்லோரும் திரண்டாலேயே, அவர்களை யடிக்க முடியும்.

இவ்விதம் ஜனங்களைத் திரட்டுகிறபோதே, தேசபக்தர்கள் கீழ்க்கண்ட காரியங்களையும் செய்யவேண்டும்.

- அகதிகளை பணமூட்டைகளிடமும் ஆர். எஸ். எஸ்ஸிடமும் விடக்கூடாது. அவர்களுடைய பராமரிப்பை தேசபக்தர்களே கவனித்துக்கொள்ள வேண்டும்.
- இராணுவத்திலும், ஸிவில் நிர்வாகத்திலுமுள்ள பிரிட்டிஷ்காரர்களை உடனடியாகத் தொலைத்துக்கட்டவேண்டும்.
- லஞ்ச ஊழல்படிந்த அதிகாரிகளுக்கு சீட்டுக்கிழித்து அனுப்பவேண்டும்.
- சர்க்காரிலும், இராணுவத்திலும் கேந்திரமான உத்தியோகங்களில் தேசபக்தர்களை நியமிக்கவேண்டும்.
- ஆயுதமும் கையுமாய்வந்து பஞ்சாபில் ரயில்களையும் ஜனங்களையும் தாக்குகிற கொலைகாரர்களை உடனடியாக அடக்கியாக வேண்டும். இதற்கு இன்றைய இராணுவத்தை மட்டும் நம்பினால் போதாது. ஆயுதமேந்தி சண்டை போடுவதற்கு தேசபக்தர்களின் பொதுஜன இராணுவம் ஒன்று—ஆங்ஸான் படைபோல—இந்தோனேஷ்யர் படைபோல—வகுப்புவாதிகளில்லாத ஒரு படையை—நேருஜியின் தலைமையில் உடனடியாக திரட்டியாக வேண்டும்.

ஆர். எஸ். எஸ். காரர்களும், ஊர்க் காலாடிகளும், மற்ற பிற்போக்குக் கைக்கூலிகளும் ஆங்கிலோ—அமெரிக்கரின் போராயுதங்களைக் கையிலேந்தி ஜனங்களைத் தாக்குகிறபோது, தேசபக்தர்கள் வெறும் கையால் சண்டைபோட முடியாது. லாத்தியும், தடியும் பயன்படாது.

எதிர்ப்புரட்சி முறியடிக்கப்பட்டாலே புரட்சி வெற்றியடையும். பிற்போக்கின் தாக்குதல் ஒழிக்கப்பட்டாலே முன்னேற்றம் ஏற்படமுடியும். சோஷியலிஸத்தை எதிர்க்கும் சக்திகளின் கலகம் அடக்கப்பட்டாலே சோஷியலிஸத்தை ஸ்தாபிக்கமுடியும். ஆகவே, சோஷியலிஸத்துக்காகப் பாடுபடும் சக்திகளின் முதல்

வேலை அராஜகத்தை ஒழிப்பது; பிற்போக்கின் தாக்குதலை முறியடிப்பது.

இதைவிட்டு காற்றுவாக்கில் சோஷியலிஸத்தைப்பற்றியும், "புரட்சி"யைப்பற்றியும, "உலகப் புரட்சி"யைப்பற்றியும் பேசுவது வெறும் ஏமாற்றுப் பேச்சு; எதிரியை எதிர்த்து முறியடிக்காமல் தப்பித்துக்கொள்ளும் பேச்சு. இந்தப் பேச்சு, ஜனங்களுக்கு அவர்களுடைய உண்மையான எதிரியைக் காட்டாமல், அவனை எதிர்த்துப் போராட ஜனங்களைத் திரட்டாமல், முடங்கிக் கிடக்கும்படிச் செய்யும். எதிரி தாக்குகிறபோது ஜனங்களை அவனுக்கு பலியாக்கும்.

ஆகவே, இன்று சோஷியலிஸத்தைப்பற்றிப் பேசுகிற சகல சக்திகளும், சோஷியலிஸத்தை உண்மையில் அடைவதற்கு, உள்நாட்டு யுத்தத்தை மூட்டுகிற எதிரியை எதிர்த்துப் போராடுவதில் - செயலில் - ஒன்றுபட்டாக வேண்டும்.

ஜனங்கள் கேட்பது பூரண சுதந்திரம்; வயிறூர சோறு; உடை; வேலை; கல்வி; வீடு; ஒய்வு. யுத்தத்தையும் நாசத்தையும் இரத்தத்தையும் தருகிறோம் என்பவர்களை ஜனங்கள் இரத்தம் கக்கும்படி செய்யவேண்டும்.

நேருஜி பூரண சுதந்திரம், உணவு, உடை வேலை, கல்வி வீடு, ஒய்வு தருகிறேன் என்கிறார். பட்டேல் யுத்தம், கலகம்,, கொள்ளை, இரத்தம், பிர்லாக்கள ஆதிக்கம், ஜமீன்தார்கள் ஆதிக்கம், ராஜாக்கள் ஆதிக்கம், அந்நிய ஆதிக்கம் தருகிறேன் என்பவர்கள் பக்கம் பேசுகிறார்.

பொதுஜனங்களுக்கு நேருவே வேண்டும்!

நேரு சர்க்காரைக் காப்பாற்ற உயிரைக் கொடுத்தும் போராடுவோம்!

நேரு கொள்கையை எதிர்ப்பவர்கள், அரசாங்கத்தைவிட்டு வெளியேறவேண்டுமென்று கோஷிப்போம்!

எதிர்ப்புரட்சியை முறியடிப்போம்!




Published by the Tamilnad Committee C. P. I., P. H. No. M.S. 351
Printed at the Janasakthi Press, Madras
Date of Printing: October 21st, 1947

# தேசபக்தர்களே உஷார் !

இந்தியா கூறு போடப்பட்டுவிட்டது. ஆனால், இரண்டு சர்க்கார்களுக்கிடையேயும் பொதுவான பிரச்சினைகள் இன்னும் தீர்க்கப்படவில்லை. அவை ஒவ்வொன்றும், இரண்டு சர்க்கார்களுக்கிடையே சண்டைமூட்ட மௌண்ட்பேட்டன் வைத்துள்ள நேரம் பார்த்து வெடிக்கும் குண்டுகள்.

போகப்போக அவை வெடிக்கும் !

★ இந்தியாவிலும் பாக்கிஸ்தானிலுமுள்ள ஒவ்வொரு சமஸ்தானத்தின் ராஜாவும், நவாபும் ஒவ்வொரு குண்டை வீசியெறிவர்.

★ அங்குள்ள ஜமீன்தார்கள், பீர்கள், நவாபுகள் இங்குள்ள நமக்கு நிரம்ப ஆத்திரமூட்டுவர்.

★ இங்குள்ள ராஜாக்கள், ஜமீன்தார்கள், பிர்லாக்கள் அங்குள்ள ஜனங்களுக்கு நிரம்ப ஆத்திரமூட்டுவர்.

★ "இந்தியா படையெடுக்கும்" என்ற புகை மண்டலத்தை சிருஷ்டித்து, பாக்கிஸ்தானை ஆங்கிலோ - அமெரிக்க முதலாளிகளின் கையில் அங்குள்ள ஜமீன்தார்களும், நவாபுகளும், பீர்களும், முதலாளிகளும் ஒப்படைப்பர்.

★ "பாக்கிஸ்தான் படையெடுக்கும்" என்ற புகைமண்டலத்தை சிருஷ்டித்து, அதே ஆங்கிலோ - அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் பக்கம் செல்லும்படி இங்கு உள்ள ராஜாக்கள், ஜமீன்தார்கள், பிர்லாக்கள், வகுப்புவாதிகள் நம்மைப் பிடித்துத் தள்ளப் பார்க்கிறார்கள்.

ஆங்கிலோ - அமெரிக்கரின் ஏஜெண்ட்கள் திரை மறைவில் இரண்டு பிரதேசங்களிலும் ஜரூராக வேலை செய்கின்றனர் ! அ. பி., ராய்ட்டர் அவர்களுக்காக உழைக்கின்றன !

அவர்கள் விரும்புவது உள்நாட்டு யுத்தம் !

உஷார் ! ஆத்திரமூட்டலுக்கு பலியானால், நாம் அழிந்தோம் !

கம்யூனிஸ்ட்